உ

சிவமயம்

# அத்வைத சிந்தனை



ஆக்கியோன் :

இலக்கிய கலாநிதி

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

1984

# வெளியீட்டுரை

1963ஆம் ஆண்டு மே மாசம் ஐந்தாம் நாள் ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் நான்கு மணி தொடக்கம் 'சமயக் கட்டுரைகள்' நூலின் வெளியீட்டு விழா முன்னைநாள் உதவி வித்தியாதிபதி திரு. க. ச. அருள்நந்தி அவர்கள் தலைமையில் வண்ணை. வைத்தீசுவர வித்தியாலயத்தில் கோலாகலமாக நடைபெற்றது.

இலக்கியகலாநிதி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் எழுதிய சமயக் கட்டுரைகள் சிலவற்றின் தொகுப்பே 'சமயக்கட்டுரைகள்' என்னும் நூல். சமயம் சம்பந்தமான முதலாவது நூல் இதுவாகும்.

பண்டிதர் பொன். கிருஷ்ணபிள்ளை, வித்துவான் பொன். முத்துக்குமாரன், பண்டிதர் கா. பொ. இரத்தினம், ஸ்ரீ கி. லக்ஷ்மணன் ஆகியோர் ஆய்வுரை நிகழ்த்தினர்.

குறித்த விழாவில் விசேட விருந்தினராகக் கலந்து கொண்டு, 'சமயக்கட்டுரைகள்' நூலின் முதற் பிரதியைப் பெற்று, நல்லாசி வழங்கியவர்கள் மூதறிஞரான வைத்திய சிரோமணி எஸ். சுப்பிரமணியம் (பி. எஸ்.) அவர்கள் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. டாக்குத்தர் சுப்பிரம[illegible]யம் அவர்களது ஆசி பெறற்கரும் பேருயமைந்தது.

வெளியீட்டு விழாவில் விழாத் தலைவர் உள்ளிட்ட அனை வரும் நூலின் சிறப்புப் பற்றிப் பேசியதோடு, பண்டிதமணி அவர்கள் தொடர்ந்தும் இத்துறையில் பெருந்தொண்டு ஆற்றவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். கொழும்பு றோயல் கல்லூரியில் அப்பொழுது விரிவுரையாளராக இருந்த உழுவலன்பர் ஸ்ரீ கி. லக்ஷ்மணன் அவர்கள் பேசும் போது "பண்டிதமணி அவர்கள் 'சமயக்கட்டுரைகள்' என்னும் நூலில் அற்புதமான—நுட்பமான கருத்துக்களைக் கூறியுள்ளார்கள். அவர்கள் சைவசித்தாந்த சமுத்திரத்தில் மூழ்கி எடுத்த நன்முத்துக்களே சமயக் கட்டுரைகள். இவற் றின் மூலம் புதுமையான—நுட்பமான கருத்துக்களைக் கூறி யுள்ளவரான பெரு மதிப்புக்குரிய பண்டிதமணி அவர்கள், அத்வைதம் சம்பந்தமான கருத்துக்களையும் வெளியிடுவா ரானால், அவை பலருக்கும் பயன்படக் கூடியனவாய் அமை யும்" என்றார்கள். அவர் தமது கருத்துக்களைத் தனிப்பட்ட முறையில், பண்டிதர் ஐயா அவர்களைச் சந்தித்த காலங் களிலும் அடிக்கடி கூறியது உண்டு.

'எதையாவது எழுதிக் கட்டுரைகளாக வெளியிட வேண்டும்; அக்கட்டுரைகள் நூல்வடிவு பெறவேண்டும்' என்ற கருத்து இல்லாதவர்கள் பண்டிதர் ஐயா அவர்கள். பலரும் பல சந்தர்ப்பங்களில் 'இன்ன விஷயம் பற்றிச் சிந்தியுங்கள்; அந்தச் சிந்தனைகள் பலருக்கும் பயன்படும்' என்று வற்புறுத்தினால் அத்தூண்டுதலால் பல விஷயங் களையும் பலமுறை சிந்திக்கும் ஒரு மரபு பண்டிதர் ஐயா அவர்களிடம் உண்டு. அவரைத் தூண்டும் பணியில் எனக்கு நல்ல அநுபவம் உண்டு. அம்மரபை யொட்டிய கருத்துக்களை உள்ளடக்கியதே 'அத்வைத சிந்தனை' என்ற தலைப்பைக் கொண்ட பேச்சுக் கட்டுரைகள். இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத் தாபனத்தினர் 'அத்வைதம்' பற்றி உரையாற்ற வேண்டும் என்று, பல தடவைகளாகக் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். பண்டிதர் ஐயா அவர்களுக்கு வயசு எண்பத்துநான்கு; தளர்ந்த நிலை. எனினும் நாமும் 'அத்வைத சிந்தனை' விஷயத்தில் அவரைத் தளரவிடாது தூண்டி வந்தோம். அத்வைத சிந்தனை உதயமாயிற்று.

இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தினர் பண்டிதர் ஐயாவின் அத்வைதம் பற்றிய கருத்துக்களை ஒலிப்பதிவு செய்து ஒலிபரப்ப எடுத்த முயற்சிகளுக்கு ஊன்றுகோலா யமைந்தவர் இப்பொழுது ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தில் இயல் நாடகக் கட்டுப்பாட்டாளராகக் கடமையாற்றும் ஸ்ரீ சி. ஹரிஹரசர்மா அவர்கள். அவர்கள் ஒலிப்பதிவு யந்திரத்துடன் திருநெல்வேலி கலாசாலை வீதியிலுள்ள பண்டிதர் ஐயா அவர்களது குடிசைக்கு அலைந்த அலைச்சல் சொல்லொணாதது. முன் ஏற்பாடு செய்துவிட்டுச் சர்மா அவர்கள் வந்து, ஒலிப்பதிவு செய்யத் தொடங்கினால், குருவிகளின் சத்தம், பசுவின் அம்பா என்னும் கதறல், அடிசிற்சாலையில் தேங்காய் துருவும் ஒலி, அடுத்த வீட்டிற் சீலை துவைக்கும் ஓசை, இடையிடையே குழந்தைகளின் சிரிப்பு, அழுகை, மழலைக் குரல் ஆகியன தோன்றும். இவற்றை யெல் லாம் ஒருவாறு சமாளித்துக்கொண்டு, பண்டிதர் ஐயா அத் வைத சிந்தனை பற்றிய பேச்சுக் கட்டுரையை வாசிக்கத்தொடங் கினால், சில சமயம் தொய்வு கிளம்பி வாசித்தல் தடைப் படும். தற்காலிகமாக ஒலிப்பதிவை நிறுத்தவேண்டி வரும். பத்து நிமிஷப்பேச்சை இடையிடையே இவ்விரண்டு நிமிஷங்க ளாகவோ, மும்மூன்று நிமிஷங்களாகவோ ஒலிப்பதிவு செய்த சந்தர்ப்பங்கள் நிறைய உண்டு. பலவித சிரமங்களுக்கு மத்தி யில் இருபத்திரண்டு பேச்சுக்களையும் ஒலிப்பதிவு செய்து ஒலி பரப்ப நடவடிக்கை எடுத்தார்கள் சர்மா அவர்கள். அவர்க ளது அரிய முயற்சியை வானொலி நேயர்கள் அமோக மாகப் பாராட்டினார்கள். இவ் விஷயத்தில் ஸ்ரீ ஹரிஹர சர்மா அவர்களுக்கு நன்றி கூறியமையாது.

பண்டிதர் ஐயா அவர்களது அத்வைத சிந்தனைப் பேச்சுக் களைக் காற்றோடு காற்றாய்ப் போகவிடாது, நூல்வடிவு பெறச் செய்ய வேண்டும் என்று அன்பர்கள் பலரும் வேண்டிக் கொண்டார்கள். அதன் பிரதிபலிப்பே 'அத்வைத சிந்தனை' என்னும் இந்நூல்.

குறித்த பேச்சுக் கட்டுரைகளை அழகாகப் பிரதிசெய்து உதவியவர் திரு. ச. தங்கமாமயிலோன் அவர்கள். நூலை வெளியிட மிகவும் உதவியாயிருந்தவர் திரு. சி. சதாசிவம் அவர்கள். மூலப்பிரதியைப் பார்த்துப் படியோலையை ஒப்பு நோக்கித் திருத்தங்கள் செய்வதில் உதவியவர்கள் இருவர். ஒருவர் திரு. மு. வைத்தியலிங்கம் அவர்கள். மற்றவர் திரு. மூ. சபாரத்தினம் அவர்கள். இவர்கள் யாவரும் பெரு நன்றிக்கு உரியவர்கள்.

சுன்னாகம் திருமகள் அழுத்தகத்தினர் அச்சமைப்பு வேலைகளிலும், புத்தக அமைப்பு வேலைகளிலும் எடுத்துக்கொண்ட கவனம் மிகவும் பாராட்டுக்குரியது.

சைவ தமிழ் மூதறிஞராக நம்மிடையே வாழ்ந்து நமக்கு வழிகாட்டிவரும் பண்டிதர் ஐயா அவர்கள், அத்வைத சிந்தனைக் கட்டுரைகளைத் தொகுத்து நூல் வடிவில் வெளியிட அநுமதி தந்தார்கள். அவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் செலுத்துவதுடன், அன்பும் பண்பும் மிக்க அவர்கள், இன்னும் பல்லாண்டு காலம் வாழ்ந்து, மேலும் நமக்கு வழிகாட்ட எல்லாம் வல்ல விநாயகப் பெருமானின் திருவடிகளை இறைஞ்சுவோமாக.

அ. பஞ்சாட்சரம்
(செயலாளர்)
பண்டிதமணி நூல் வெளியீட்டுச் சபை

உரும்பிராய் மேற்கு,
உரும்பிராய்
01-04-1984.

# முன்னுரை

**இந்த முன்னுரை**
**அத்வைத சிந்தனையை**
**ஓரளவு**
**விளக்க முயல்வதொரு**
**சிறு விளக்கு**

*　　　　*

**விளக்கம் வருமாறு :**

> "ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
> என்றும் அகலா திருள்."

திருவருட்பயனில் இருண்மல நிலையில் வருவதொரு பாடல் இது.

'ஒன்று' என்றது அறியாமையாகிய ஆணவ மல இருளை. 'ஒளி' திருவருள்; இறையொளி. 'உள்ளம்' உயிர்.

'கவராதேல்' என்பதனுல் கவரும் என்பது பெறப்படும்.

இனி, ஒன்று மிகினும் ஒளி உள்ளம் கவரும் என முதல் அடியை அந்வயம் செய்துகொள்ளுவோம்.

உயிர் கேவலாவஸ்தையில், ஆணவ இருளில் மூழ்கிக் குருடுபட்டுக் கிடப்பது. அவஸ்தை நிலை.

*　　　　*　　　　*

மூலமான அவஸ்தைகள் கேவலம், சகலம், சுத்தம் என மூவகைப்படும்.

இறைவன் நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன்.

இறைவி இருட்டு மூலையில் இருந்த குமரி.

இறைவனும் இறைவியுமாகிய இறையொளி உயிர்க்குயிர்.

அது உயிரைத் தன்பால் ஈர்த்துக்கொண்டேயிருக்கும்.

ஈர்ப்பின் பயனாய்க் கிடைத்ததே இந்தச் சரீரம். இது இருளிற் கிடைத்ததொரு சிறு விளக்கு. இவ் விளக்காற் சற்றே குருட்டுத்தன்மை நீங்கும். இந்நிலை சகலாவஸ்தை. இதைப் பயன்படுத்தும் முறையிற் பயன்படுத்துவதாற் கிடைப்பது சுத்தாவஸ்தை.

இனி இதனை மற்றொரு வகையால் விளக்க முயல்வோம்.

எமது சமயம்,

சுத்தாத்துவித சைவசித்தாந்தம்.

சைவம் சிவசம்பந்தம். எதனோடு சம்பந்தம் என்பது கேள்வி? உயிர்க்குயிருக்கு உயிரோடு உளதாய சம்பந்தம் என்பது விடை. அச்சம்பந்தப் பயனே சுத்தாத்துவிதம். சுத்தம் என்பது சுத்தாவஸ்தையை. அந்த அவத்தையில் உயிர் உயிர்க் குயிரோடு அத்துவிதப்படும். அந்தச் சுத்தாத்துவிதமே சித் தாந்தம். உயிரின் உயர்வற உயர்ந்த உயர்வே சித்தாந்தம். முடிந்த முடிபு என்பது சித்தாந்தம் என்பதன் பொருள்.

இனி இதனை மற்றொரு முகமாகவும் நோக்குவோம்.

"முகத்துக் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"

என்பது திருமந்திரம். அதனை நெற்றிக்கண் என்று சொல்வது முண்டு. அது வெளித்தவர்கள் தாம் கண்டவைகளை நம்ம னோர்க்கு விளக்குவது முடியாத காரியம்.

'என்மனார் புலவர்'

என்ற வாய்பாட்டால் ஒருவாறு சொல்லிச்செல்வர்.

கண்ணுள்ளவர்கள் கண்டவைகளை ஊனக் கண்ணுற் காண முயன்றதே அத்வைத சிந்தனை.

இச் சிந்தனை கண்வெளிப்புக்கேற்றவாறு சிந்திப்பதற்கு ஒரு தூண்டுகோலாக அமையலாம் என்க.

## நன்றி உரை

பெரு மதிப்புக்குரியவர்களான சமய தத்துவ மேதைகள் இருவரின் தூண்டுதலின் விளைவாய், மனசில் அத்வைத வித்து ஒன்று முளைகொண்டது.

அத்வைத முளையைச் சற்றே வளரச் செய்தது வானொலி.

மேற்குறிப்பிட்ட மேதைகள் ஸ்ரீ கி. லக்ஷ்மண ஐயர் அவர்களும் அவர்களின் மைத்துனர் ஸ்ரீ சிவராமன் அவர்களும் ஆவர்.

இருவர் மேதைகளும் மகான் மதன்மோகன் மாளவியாவின் பல்கலைக்கழகத்தோடு தொடர்புபட்டவர்கள். லக்ஷ்மண ஐயர்அவர்கள் அக்கழகத்தில் தத்துவ ஆராய்ச்சி செய்தவர்கள். சிவராமன் அவர்கள் அக்கழகத்தில் சமயதத்துவப் பேராசிரியரா யிருந்தவர்கள்.

வானொலியில் அத்வைத முளையை மெல்ல மெல்லச் சிறிது வளர முயன்றவர்கள் அன்பர் உயர்திரு சி. ஹரிஹர சர்மா அவர்கள்.

எனது அன்பு மாணவர் ஆசிரியர் திரு. அ. பஞ்சாட்சரம் அத்வைத சிந்தனையைப் புத்தகவடிவில் அமைத்திருக்கின்றார்.

இங்கே குறிப்பிட்ட அனைவர்க்கும் அன்பார்ந்த ஆழ்ந்த நன்றியை உள்ளத்தில் இருத்திக்கொள்ளுகின்றேன்.

கலாசாலை வீதி,
திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.
01-03-1984

# உள்ளுறை

# அத்வைத சிந்தனை — 1

இறைவனை 'அத்துவித வஸ்து' என்கின்றார் தாயுமானவர்.

இறைவன் உயிர்க்குயிராய் உயிரேயாய் இரண்டற்றிருக்கின்றான்.

உயிர் உடம்போடு இரண்டற்று உடம்பேயாய் இருக்கின்றது.

இவ்வாறு இரண்டற்றிருக்கும் நிலைக்கு அத்துவிதம் என்று பெயர். அத்வைதம் எனினும் பொருந்தும்.

மேற்காட்டிய இருவகை அத்துவித நிலைக்கும் வேறுபாடுண்டு.

உயிர்க்கு உடம்போடுளதாய அத்துவித நிலை, நிலையில்லாதது; அநித்தியமானது.

உயிரோடு இறைவனுக்குளதாய அத்துவித நிலை, நிலையானது; நித்தியமானது. இந்த நித்திய அத்துவிதச் சிறப்பு நோக்கி, இறைவனை 'அத்துவித வஸ்து' என்று விதந்தோதினர் தாயுமானவர் எனலாம்.

* * *

உடம்பின் செயலனைத்தும் உயிரின் செயலே. அவ்வாறே, உயிரின் செயலனைத்தும் உயிர்க்குயிராகிய இறைவன் செயலேயாம்.

'சந்ததமும் எனது செயல் நினது செயல்' என்கிறார் தாயுமானவர்.

உடம்பு மூலம் உயிர் செய்வதை, உயிர் செய்வது என்று உடம்பு அறியாது; அது சடம்.

உயிர் மூலம் உயிர்க்குயிர் செய்வதை, உயிர் சித்தாயிருந்தும், உயிர்க்குயிர் செய்கின்றதென்று அறிகின்றிலது; இது விசாரிக்கற்பாலது.

* * *

'ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்' என்பது கொடிக் கவி; உமாபதி சிவத்தின் வாக்கு. 'ஒன்று' என்றது உயிரை. ஒளி 'அத்துவித வஸ்து' வாகிய இறை ஒளி. இருள்—ஆணவ இருள்.

ஒளி இருளை அறியாது; இருள் ஒளியை அறியாது. உயிரோ, இரண்டுக்கும் இடமாய் இருக்கின்றது.

அறியாத காரணம் அறியாமையாகிய ஆணவ இருளில் உயிர் முழுகிக் கிடப்பதேயாம்.

காரணம் புலப்படும்போது, மற்றொரு சந்தேகம் தலை தூக்குகின்றது.

ஒளிப்பிழம்பாகிய இறை அத்துவிதப்பட்டிருக்கும் உயிரை, இருள் மூடுவதெப்படி? என்பது சந்தேகம்.

இச்சந்தேகத்தை திருவருட்பயன் விடுவிக்கின்றது. 'ஒளியும் மிக இருளே' என்கின்றது திருவருட்பயன்.

பேரொளியை அநுபவிக்கும் ஆற்றல் உயிர்க்கில்லை. ஆகவே, ஆணவ இருளுக்கு மேலே, பேரொளியும் இருள் செய்து விடுகின்றது.

இந்நிலையில், உயிரைக் 'குருட்டுக் கிழவன்' என்கின்றது திருமந்திரம். குருடு படுகுருடாய் விட்டது.

* * *

இப்பொழுது குருட்டுக் கிழவனைப் பற்றிப் பல கேள்விகள் எழலாம். இக்குருடனுக்குக் கோல் கொடுத்துதவுவார் இல்லையா? இவனது கண்கள் ஒருகாலும் விழிப்பதில்லையா? என்பன கேள்விகள்.

* * *

'ஒன்று மிகினும் ஒளி உள்ளம் கவரும்' என்ற திருவருட்பயன் கேள்விகளுக்கு விடை தருகின்றது.

ஒன்று — இருள்; மேல் விபரீத்த உயிரைக் குருடுபடுத்தும் இருள். மிகினும்—அவ்விருள் எத்துணை மிக்கிருந்தாலும். ஒளி, உள்ளம் கவரும்.

அத்துவிதப் பட்டிருக்கும் இறையாகிய ஒளி, உள்ளம் எனப்படும் உயிரைத் தன்பால் ஈர்க்கும்.

இருள் சடம்; இறையொளி சித்து. சித்தாகிய இறை ஒளி இருளில் சடமாய்க் குருடுபட்டுக் கிடக்கும் உயிர்க் கிழவனைத் தன்பால் ஈர்த்தே தீரும்.

காந்தத்துக்கு இரும்பைத் தன்பால் இழுக்காமலிருக்க மாட்டாமை இயற்கை. அவ்வாறே இறைஒளிக்கு, இரங்காமலிருக்கமாட்டாமை இயற்கை. இரங்காமலிருக்கமாட்டாமையாகிய இரக்கத்தின் பயன்: உயிரைத் தன்பால் ஈர்த்தலாம்.

* * *

'இருட்டறை மூலை இருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி அவனை மணம்புரிந் தாளே.'

குமரி—சிவசத்தி. இத் திருமந்திரத்தாலும்; 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன்' என்ற திருவாசகத்தாலும்;

சிவமும் சிவசத்தியுமாகிய இறை ஒளி,
இருளிலிருந்து உயிரை ஈர்த்து,
உய்யக் கொள்ளுந் திறன் அறியத்தக்கது.

உயிர்க்கு உய்தி, இருளிலிருந்து எடுக்கப்பட்டு, மாசு தீர்ந்து, தன்னோடு அத்துவிதப்பட்டிருக்கும் இறையோடு, தான் அத்துவிதப்படுதலாம். இந்த அத்துவிதம் சுத்தாத்துவிதம் எனப்படும். சுத்தம்—மாசின்மை.

* * *

'ஆணவத்தோடு அத்துவிதமானபடி, மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதஞ்சாருநா ளெந்நாளோ'

என்கிறார் தாயுமானவர்.

இதனால், அத்துவித வஸ்துவாகிய இறைஒளி, உயிரோடு அத்துவிதப்பட்டிருக்கும்போதே, உயிர் ஆணவத்தோடு அத்துவிதப்பட்டிருந்த தென்பதும், அது பக்குவப்பட்டு மெய்ஞ்ஞானத் தாணுவாகிய இறை ஒளியோடு அத்து விதப்படவேண்டும் என்பதும் பெறப்படும்.

இவற்றால் உயிரோடு அத்துவிதப்பட்டிருக்கும் இறையோடு, உயிரும் அத்துவிதப்படவேண்டும் என்பதே முடிந்த முடிபாம்.

இறை அத்துவிதம் அநாதி; தொடக்கம் இல்லாதது. உயிர் அத்துவிதம் ஆதி; தொடக்கம் உள்ளது.

அது நீயாயிருக்கிறது; அவ்வாறே, நீ அதுவாயிருக்க வேண்டும் என்றவாறு.

* * *

'அவன்தானும் அத்துவித மானபடி மாசகன்று
தான்அவனும் அத்துவிதம் ஆகுநா ளெந்நாளோ'

என்றொரு சூத்திரம் வரலாம்.

தான்—உயிர். அவன் — இறை.

அத்துவித வஸ்துவின் விளைவுப் பயனே, உயிரெய்தும் சுத்தாத்துவித முத்திப்பேறு.

* * *

அத்துவித விளைவைப் புலப்படுத்துபவை, வடமொழியிலும் தென்மொழியிலும் உள்ள மகா வாக்கியங்களாம். வடமொழி வாக்கியங்களில் முக்கியமானது, 'தத்துவமசி.' அவ்வாறே, தென்மொழி வாக்கியங்களுள் முக்கியமானது, 'உடனுதல்'.

வடமொழி வாக்கியங்களுள் மற்றொன்று, 'துவம் தத்தசி.'

தத்துவம் — அது நீ ;
துவம் தத் — நீ அது.

இரு வாக்கியப் பொருளையுந் தரவல்லது, 'உடனுதல்.'

இறைவன் உயிரோடு அத்துவிதப்பட்டிருப்பது போல உயிரும் இறைவனோடு அத்துவிதப்படவேண்டும் என்ற முக்கியப் பொருளை நினைவுகூர்வோமாக.

# அத்வைத சிந்தனை — 2

உயிர், பேரொளிப்பிழம்பாகிய ஒளி, தன்னோடு அத்துவிதப்பட்டிருக்கவும், இருளில் முழுகிக் குருடுபட்டுக் கிடத்தல் பற்றியும் ;

இறையொளி அந்தப் படுகுருட்டை இருளிலிருந்து எடுத்து, தன்னோடு அத்துவிதப்படுத்தல் பற்றியும் ;

முந்திய பேச்சில் விசாரஞ் செய்தோம்.

* * *

இனி,

இறையொளியின் உபகாரம் உயிர்க்கு இன்றியமையாதது பற்றி விசாரிப்போம்.

கண்ணுக்கு ஒளி உண்டு ; அவ் வொளி பொருள்களைக் காணாது; புற ஒளியோடு அத்துவிதப்பட்டு, அவ்வொளி பரவுமிடங்களிற் பரவி, அவ்வொளி கண்டுகொண்டிருப்பதைத் தானும் காணும்.

அவ்வாறே, உயிரின் அறிவொளி, தன்னோடு அத்துவிதப் பட்டிருக்கும் அருளொளியோடு அத்துவிதப்பட்டு, அருளொளி அறிந்துகொண்டிருப்பதைத் தானும் அறிவதன்றி, அருளொளியின் உபகாரமின்றி எதனையும் அறியாது.

* * *

கண்ணொளிக்கு உபகாரம் புறவொளி; உயிரின் அறிவொளிக்கு உபகாரம் அருள் ஒளியாகிய உள்ளொளி.

உயிர், அறிவு விருத்தியாதற்கு, உள்ளொளியாகிய அருள் ஒளியோடு, உயிரின் அறிவொளி அத்துவிதப்பட்டே தீரவேண்டும்.

* * *

ஒளியும் மிக இருளேயாய், உயிரைப் படு குருடாக்கும் இறை ஒளியோடு, உயிரின் அறிவொளி அத்துவிதப்படுவது யாங்ஙனம் என்பது, பாரிய கேள்வி.

கேள்விக்கு விடை, 'நள்ளிருளில் நடக்கும் நட்டத்தால்' அறியப்படும்.

நட்டம் என்பது பஞ்சகிருத்திய நடனம். நடனப்பேறு, இந்தச் சரீரம். 'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது' என்கின்றார் நாவலர்பெருமான்.

* * *

சரீரம், சத்தமும் அர்த்தமுமான பிரபஞ்சக் கூட்டரவு. இது மூக்குக் கண்ணாடியோடு ஒப்பிடத்தக்கது.

* * *

சூரிய ஒளியை நேரே பெறும் ஆற்றல் அற்ற கண்ணொளிக்கு, மூக்குக்கண்ணாடி, புற ஒளி கண்ணொளியோடு அத்துவிதப்படுதற்கு வழி செய்கின்றது.

இந்தச் சரீரம், அருள் ஒளியைத் தணிக்கைசெய்து, அதனோடு உயிரின் அறிவொளி அத்துவிதப்படுதற்கு உபகரிக்கின்றது.

* * *

உடல் மூலம் உயிரின் அறிவொளிக்குக் கிடைக்கும் ஒளி, இருளிற் கிடைத்ததொரு சிறு விளக்கு.

இவ் விளக்கொளியால் விளக்கமுறும் உயிரறிவு, சுட்டறிவு. இச் சுட்டறிவால் சுட்டிறந்த பொருளை அறிய முடியாது.

* * *

கண்ணாடியால் திருத்தமுற்ற சில கண்களுக்கு, கண்ணாடியின்றியே சூரிய ஒளியை நேரே ஏற்கும் நிலை கைகூடுவதுண்டு.

அவ்வாறே,

உடல் மூலம் சுட்டறிவுபெற்ற உயிர்களுட் சில பக்குவ முற்று, உடல் உபகாரமின்றியே அருள் ஒளியோடு அத்து விதப்பட்டு, எங்குமாய அருள் வியாபகத்திற் பிரிக்க முடி யாத நிலையை எய்தும்.

அது முடிந்த முத்திநிலையாம்.

* * *

'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி, முத்தியின்பம் பெறும்பொருட்டேயாம்'.

—நாவலர் வாக்கு.

இது 'கிடைத்த சரீரம்' ஆதலால், உதவினோன் கருத்தறிந்து பயன்படுத்தவேண்டுமென்பது நன்கு பெறப் படும்.

* * *

உடம்பை உதவினோன் கருத்தறிந்த திருமூலர், 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்கிறார்.

உயிரை வளர்த்தலாவது, உடலைப் பேணுமுறையிற் பேணி, உயிர், உயிர்க்குயிரோடு அத்துவிதப்படுதற்கு உப கரித்தலாம்.

உடல் ஒரு குட்டிப் பிரபஞ்சம்; இது, சத்த அர்த் தக் கூட்டரவு என்று மேலே குறிப்பிடப்பட்டது.

பிரபஞ்சம், உயிர் இறைவனை அணுகுவதற்கு வழி செய்வதால், அத்துவாவெனப்படும். அத்துவா என்பதன் பொருள் வழி.

சத்த அத்துவா: மந்திரம், பதம், வன்னம் என முத்திறப்படும்; அர்த்த அத்துவா: கலை, தத்துவம், புவ னம் என முத்திறப்படும்.

ஆறு அத்துவாக்களாலும் ஆனது பிரமாண்டமான இந்தப் பிரபஞ்சம்; அஃதாவது, காணப்படும் இந்த உல கம். குட்டிப் பிரபஞ்சமான இந்தச் சரீரக் குடிசையில்

இருந்துகொண்டு உலகமாகிய பிரபஞ்சத்தைக் காணு கின்றோம்.

சினிமாத்திரையிற் காட்சிகள்போல, பிரபஞ்ச விசித்திர விநோதக் காட்சிகள் தோன்றி நின்று ஒடுங்குகின்றன.

* * *

'எங்கிருந்தும் இதன் தோற்றம் முதலியன' என்று பிரபஞ்சம் தோன்றுமிடத்தை ஆராய்கின்றது, பிரம சூத்திரம்.

'பிரமத்தை அறிய ஆசை' என்று தொடங்கிய பிரம சூத்திரத்துக்கு, எதிர்ப்பட்ட பிரபஞ்ச மூலத்தை அஃதாவது, பிரபஞ்சம் தோன்றுமிடத்தை ஆராயவேண் டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

'எங்கிருந்தும் இதன் தோற்றம் முதலியன' எனப் பிரபஞ்சம் தோன்றுமிடத்தை விசாரித்த பிரம சூத்திரத் துக்கு, அந்த இடம், 'மாயை' என்கின்றது சித்தியார்.

'மாயையின் உள்ள வஞ்சம்' என்பது சித்தியார் கூற்று. வஞ்சம் — பிரபஞ்சம். வஞ்சிப்பதால் வஞ்சம் எனப்பட்டது. வஞ்சிப்பதாகிய இப் பிரபஞ்சம் மாயையில் உள்ளது என்ற வாறு.

* * *

அந்த மாயைதான் யாது? அதனை ஆராய்ந்தோர் பலர்; ஒருவர் நாரதர்.

நாரதர் கதை வருமாறு:

நாரதர் நாராயணனிடம் மாயை பற்றி விளக்கங் கேட் டார். நாராயணன், 'அதோ அந்த ஆற்றில் நீர் முகந்து வருக, தாகசாந்தி செய்துவிட்டு, மாயை பற்றிப் பேசுவோ மென்றார்.' நாரதர் ஆற்றங்கரைக்குப் போய் முதற் கண் தாம் தாகசாந்தி செய்து, பின் கமண்டலத்தில் நீர் முகந்துகொண்டு மீளும்போது, ஆற்றங்கரை மணலில் சற்றே தங்க மனம் வந்தது; உறங்கிவிட்டார். ஒரு கனவு: விவா கம் செய்து பிள்ளைகள் பெற்றுப் பாரிய குடும்பத்தரானார். மாடு கன்று நாய் பூனை எல்லாம் சேர்ந்துவிட்டன. ஒருநாள்

ஆறு பெருகி யாவரையும் யாவற்றையும் அள்ளிக்கொண்டு போய்விட்டது. நாரதர் மணலில் உருண்டு புரண்டு அழுதார். நீர் நிறைந்த கமண்டலம் சரிந்து விழுந்தது. அவரை நனைத்து நித்திரையைக் குலைத்துவிட்டது. திடுக்கிட்டெழுந்தார் நாரதர் ; கமண்டலத்தை எடுத்தார் ; முன்போல் நீர்நிறைத்தார் ; 'ஐயோ, நாராயணனுக்குத் தாகம்' என்று சொல்லிக்கொண்டு நாராயணனிடம் ஓடினார். நாராயணன் உரத்த சிரிப்புச் சிரித்தான். சிரித்துவிட்டு 'நாரதரே, மாயை பற்றி விளங்குகிறதுதானே' என்றார். 'ஆம், ஆம்' என்று சொல்லிக்கொண்டு, உலகைப் பார்த்துச் சிரித்தவாறு சென்றார் நாரதர்.

நாரதர் சிரித்ததேன் ? இந்த நனவுலகமும் ஒரு நாளைக்குக் கனவுலகமாகுமே. நனவுலகு, கனவாய்ப் பழங்கதையாய் மறையுங் காலம் தூரத்திலில்லையே. இதை, இந்த நனவுலகு சிந்திக்குமா? என்றுதான் சிரித்தார் போலும்.

நாரதர் மாயையின் விசித்திரத்தை விளங்கியிருக்கலாம்;

ஆனால்,

நாங்கள் நாரதராவ தெப்படி ?

* * *

உடம்பு 'மாயாயந்திர தநு' என்பது சித்தியார்.

மாயை, தநு கரண புவன போகங்களைத் தந்து, உயிர்க்குச் சுட்டிறந்த நிலை வருவதற்குப் பக்குவப்படுத்துவது.

இந்த மாயை விடிமாவளவும் விளக்கு; விடியும்வரை பேணவேண்டிய விளக்கு;

விடிந்தபின் இறையாகிய பெரிய விளக்கை உபகரிக்கும் விளக்குமாம்.

அத்துவித வஸ்துவை உயிர் அணுகுமாறு செய்யும் விளக்கு, மாயை என்றவாறு.

* * *

இப்பேச்சில், இறையோடு உயிர் அத்துவிதப்படுதற்கு இறையொளியின் உபகரிப்புப் பற்றிச் சிந்தித்தோம்.

இறையொளி உபகரிப்பதற்கு மாயை தேவையாயிருப்பது பற்றி இனிச் சிந்திப்போம்.

# அத்வைத சிந்தனை — 3

உயிர் தன்னோடு அத்துவிதப்பட்டிருக்கும் இறைவனோடு, (உயிராகிய) தான் அத்துவிதப்படும்பொருட்டு,

உயிரின் அறிவொளி, இறைவனின் அருள் ஒளியோடு அத்துவிதப்படல் வேண்டும். அது சித்தித்தற்பொருட்டுக் கிடைத்தது இந்தச் சரீரம்.

சரீரம், 'மாயா யந்திர தநு.'

தநு — சரீரம்.

இத்துணையும் முந்திய பேச்சின் சாரம்.

இனி, சரீரத்தைத் தரும் மாயையின் வரலாறு பற்றி விசாரிப்போம்.

* * *

உயிரறிவு, விருத்தியாதற்பொருட்டு, உயிரின் அறிவொளி, உயிர்க்குயிராகிய இறையொளியோடு அத்துவிதப் பட்டே தீரவேண்டும்.

அதற்குபகாரப்படுவது மாயை; அது ஒரு சடசத்தி; அதுவே பிரபஞ்ச மூலம். பிரபஞ்ச காரணம் 'மாயையேகாண்' என்கின்றது சித்தியார்.

பிரபஞ்ச மூலம் பரமாணுக்களின் கூட்டரவு என்பவர்களை, வன்மையாகக் கண்டிக்கின்றது சித்தியார். 'காரியம் அணுவிற் கண்டாம்' என்பது கண்டனம். காரியம் பிரிவு படக்கூடியது. அணுக்களை விஞ்ஞானிகள் பிரித்துப் பரிசோதனம் செய்து, பிரிவுகளைக் கூட்டிவைத்திருந்த சத்தியைப் பயன்படுத்துவது கண்கூடு. விஞ்ஞானிகள் கண்ட அணுசத்தியி

லிருந்து, மாயையாகிய சடசத்தி எப்படியிருக்குமென்பது ஊகிக்கத்தக்கது.

இந்த மாயா சத்தியை அநுக்கிரகித்தது, இருட்டு மூலையில் இருந்த குமரியாகிய சிவசத்தி. அதனால், இச் சடசத்தியை, 'விமலனுக்கோர் சத்தி' என்கின்றது சித்தியார். ஆயுதங்கள் போல இச் சத்தி பயன்படுவது. பயன்படுத்துவோன் இறைவனாகிய மெய்ஞ்ஞானி.

முதற்கண் பேரொளிப் பிழம்பைத் தணிக்கை செய்தற்குப் பயன்படுத்தப்படுகின்றது. பேரொளியைத் தடுத்துத் தணிக்கை செய்யும் பகுதி, சுத்த மாயை எனப்படும். சுத்த மாயையாற் தணிக்கை செய்த ஒளிக் கிரணத்தைத் தானும், உயிர் தாங்கலாற்றாமையின், மாயையின் மற்றொரு பகுதி எத்தனையோ கவசங்களை உயிருக்கு இட்டு, அருள் ஒளிக் கிரணத்தோடு, உயிரின் அறிவொளி அத்துவிதப்படுதற்கு உபகரிக்கின்றது, உயிர் ஆணவ அழுக்கில் முழுகிக்கிடத்தலால், உயிருக்குபகரிக்கும் மாயைப்பகுதி அசுத்தம் அடைகின்றது. அதனால் அப்பகுதி அசுத்தமாயை எனப்படுகின்றது.

ஆகவே, மாயையின் ஒரு புறம் சுத்தம்; ஒருபுறம் அசுத்தம். இந்த அசுத்தம் சுத்தாசுத்தம் எனவும்படும். அருள் ஒளிக்கிரணம் ஊடுருவுவதால் சுத்தம்; அழுக்கொடுபட்டதை மூடுவதால் அசுத்தம்.

ஆகவே,

அசுத்தமாயை, சுத்தாசுத்த மாயையாம்.

* * *

பேரொளியைத் தணிக்கை செய்யும் சுத்த மாயை ஐந்து மடிப்புக்கள் கொண்டது. சிவம், சக்தி, சதாசிவம், மகேசுவரம், சுத்தவித்தை என்பன அவற்றின் பெயர்.

உயிரை மூடுங் கவசங்கள் ஐந்து. ஆனந்தமயகோசம், விஞ்ஞானமயகோசம், மனோமயகோசம், பிராணமய கோசம், அன்னமயகோசம் என்பன அவை. அன்னமய

கோசமே காணப்படும் இந்தச் சரீரம். கோசம் – உறை. விஞ்ஞானமயகோசத்தில் ஐந்து அடுக்குகள் உண்டு. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பன அவற்றின் பெயர்.

பஞ்சகோசங்களாலாய இச்சரீரம், உயிரொளி, உயிர்க் குயிரின் ஒளியோடு அத்துவிதப்படுதற்கு உபகாரமாயிருப் பது முன்னே பேசப்பட்டது.

* * *

'விடிவாம் அளவும் விளக்கனைய மாயை' என, மாயை யைப் பாராட்டுகின்றது திருவருட் பயன். அதேசமயம்,

'மாயை மயக்கமும் செய்யுமன்றே' என்கின்றது சித்தியார்.

உயிர்போல ஒளிக்கும் இருளுக்கும் இடமாய் விடுகின் றது மாயை.

சுத்த பாகம் சுத்த அறிவைத் தர, அசுத்த பாகம் அறி வறியாமைகளைத் தந்துவிடுகின்றது.

மனிதரில் விலங்குகளையுங் காண்கின்றோம்; தேவர்களை யுங் காண்கின்றோம்.

மாயை மயக்கஞ் செய்வதால் மலமுமாம். சுத்தமாயை கூட விடப்படவேண்டியதாகையால் பொதுப்பட மாயை, மலம் எனப்பட்டது,

'இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்ற ஆறு' என்பது திருவாசகம்.

பூமி என்றது, மாயையில் தோன்றும் சத்த அர்த்தப் பிரபஞ்சத்தை.

பிரபஞ்சம், 'மலத்துளதாம்' என்கின்றது, சிவஞான போதம்.

ஆணவ மலம் இருப்பதால், மாயாமலத்தில் பிரபஞ்சங் காட்சியளிக்கின்றதென்றவாறு; மலம் நீங்கப் பிரபஞ்சம் கயிற்றரவாம் என்க.

'பூமி' கயிற்றரவு ஆயினும் ஆகுக; மரத்தை மறைக்கும் மாமத யானையாயினும் ஆகுக.

பிரபஞ்சம் உய்யக்கொள்கின்ற 'ஆறு' ஆம்.

கயிற்றரவுதான், கயிற்றைக் காண வழிசெய்வது. கயிறு இங்கே இறை.

வழி: அத்துவா,

ஆகவே, இந்தப் பிரபஞ்சம், முத்திக்கு வழிசெய்யும் அத்துவா.

ஆறு அத்துவாக்களில் அர்த்த அத்துவாக்களாகிய சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்கின்ற கலைகளும்,அவைகளைப் பற்றியிருக்கின்ற அதிசூக்குமை, சூக்குமை, மத்திமை, பைசந்தி, வைகரி என்கின்ற சத்தப் பிரபஞ்சத்துக்கு மூலமான வாக்குக்களும், முதலிரு கலைகளைச் சேர்ந்த சிவதத்துவங்களும் சுத்த மாயையில் உள்ளவை. மேலும் சுத்தபுவனம், சுத்தமான சத்தப் பிரபஞ்சம் என்பனவும் உண்டு.

சாந்தியதீதை, சாந்தி கலைகளுக்குக் கீழ்ப்பட்டவை சிவ தத்துவம்.

அவ்வாறே வித்தியாகலைக்குக் கீழ்ப்பட்டவை வித்தியா தத்துவங்கள். அவை, அசுத்தமாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருஷன் என்பன. வித்தியாகலை, சுத்தமாயையில் இருப்பதால், அசுத்தமாயை, வித்தியா கலைக்குக் கீழ்ப்பட்டுத் தத்துவமாய்விட்டது.

பிரதிட்டை, நிவிர்த்தி கலைகளுக்குக் கீழ்ப்பட்டவை ஆன்மதத்துவங்கள் இருபத்துநான்கு.

புவனம், மந்திரம், பதம், வன்னம் என்பனவும் உண்டு,

* * *

மாயா தத்துவங்களில் அறிவைத் தூண்டும் தத்துவம் வித்தை; அதுபோல் இச்சையைப் பெருக்குந் தத்துவம் அராகம். இச்சைதான் கர்ம மூலம்.

'இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதிநீ முன்னிய வினையே' என்கிறது திருமுருகு. நசை – இச்சை.

இச்சை சுத்தப்படும்வரை, கர்மம் விளைந்துகொண்டே இருக்கும். உயிர் பிறந்திறந்து உழலும்,

சில மருந்துகள் உள்ளே அடங்கிக் கிடந்த நோயை வெளிப்படுத்திப் பின் சுகஞ் செய்வதுண்டு.

மாயையின் உபகாரத்தால் கர்மம் பெருகுவது, ஆணவ மலம் வலிகுன்றுவதற்கேயாம்.

ஆணவவலி குன்றுவதாயினும், கர்மம், நல்வினை, தீவினை எனப்பட்டு, இருள்சேர் இருவினையாய், மலமாய், உயிரைப் பிறவிக் கடலில் ஆழ்த்தி விடுகின்றது; மலவரிசையில் சேர்ந்து விட்டது. ஆணவம், மாயை, கன்மம் மும்மலங்கள்.

'அவன் அவள் அது என்னும் முக்கூற்றுப் பிரபஞ்சம், உயிரின் பக்குவ அபக்குவத்திற்கேற்ப, தோன்றி நின்றொடுங் கும்' என்ற சிவஞான போதத்துக்குப் பின்வருமாறு உரைகாண்போம். ஆணவ மலம் இருப்பதால், மாயாமலத் தில், கர்மமலத்துக்கு ஏற்றவாறு தோன்றி நின்றொடுங்கும் என்க.

மலபரிபாகமுள்ளவர்க்குப் பிரபஞ்சம் ஒடுங்கும்; மற் றொரு பகுதியார்க்குத் தோன்றும்; வேறொரு பகுதியார்க்கு நிற்கும்; இது, பிரபஞ்ச விநோதம்.

யார் ஒருவருக்குப் பிரபஞ்சம் கயிற்றரவாய் — இல்லை யாய் அந்தமுறுமோ, அந்த அந்தம், பிரபஞ்சம் அந்தமுறு தற்கு நிமித்தமான இறையின் பெயராயுமிருக்கும். அந்த இறையாகிய அந்தந்தானே, மற்றொரு சமயம் பிரபஞ்சந் தோன்றுதற்கு ஆதியாயுமிருக்கும்.

பிரபஞ்சந் தோன்றும்போது, அந்தமுற்ற இடத்திலே தானே தோன்றவேண்டும். அந்தம் ஆகிய இறையைக் காணு தார்க்குப், பிரபஞ்சந்தானே தோன்றும்.

'அந்தம் ஆதி என்மனார் புலவர்' என்றது சிவஞான போதம்.

பிரபஞ்சந் தோன்றி நின்றொடுங்குவதற்கு, நிமித்தமாய் வினைமுதலாயிருப்பவன் இறைவன்.

இறைவன் வினைமுதல் :

மாயை விதைமுதல்.

அஃதாவது, இறை முன்னிலையில் பிரபஞ்சந் தோன்றி நின்றொடுங்குங் காட்சிகளுக்கு, மாயை வித்தாயிருக்கும் என்றவாறு.

பிரபஞ்சம் அந்தம் உறும் அந்தமாகிய இறைவனின் சொரூபம் சச்சிதானந்த சிவமாம்.

அதுதானே,

அத்துவித வஸ்துவாய் உயிர்களுக்கு அருள்விளைவை அளிக்கின்றது.

# அத்வைத சிந்தனை — 4

உயிர் தன்னோடத்துவிதப்பட்டிருக்கும் உயிர்க் குயிரோடு, தானும் அத்துவிதப்படுதற்கு, அறிவு பிரகாசிக்க வேண்டும். பிரகாசிப்பதற்குக் கிடைத்த இச் சரீர விளக்கில், கயிற்றரவுகளே காட்சியளிக்கின்றன. அதனால், காட்சிகளில் இச்சை பிறந்து கர்மம் பெருகுகின்றது.

மலபந்தம் அந்தமுறும் பரிபக்குவர்களுக்கு, கயிறு தானே, அரவுகளை அந்தஞ் செய்வதொரு அந்தமாயும்,

அரவுகளின் தோற்றரவுகளுக்கு ஆதியாயும்,

இருப்பதன் இரகசியம் புலமாம். 'அந்தம் ஆதி என்மனார் புலவர்'

கயிறு என்றது உயிர்க்குயிரை.

இத்துணையும் முந்திய பேச்சுக்களின் சாரம்.

* * *

இனி, சரீர இயல்பை மேலும் சிறிது விசாரிப்பாம்.

அறியாமை உயிர்க் குணமன்று; அது உயிரைப் பற்றியிருப்பதொரு குற்றம்.

குணம், குணியிலிருப்பது; பிரிக்க முடியாதது. பால் குணி; வெண்மை குணம்.

அறியாமை ஆணவ இருள்; அநாதியிலேயே உயிரைப் பற்றியதொரு மகா குற்றம்; நீக்கக் கூடியது.

நடன விசேடத்தால் இருளிற் சற்றே விழிபெற்றெழும் உயிரின் அறிவொளி, இறையொளியோடத்துவிதப்படுதற்குக் கிடைத்தது, குட்டிப் பிரபஞ்சமாகிய இந்தச் சரீரம். இது அறுவகை அத்துவாக்களின் கூட்டரவு; ஒவ்வொன்றும் இருவகை ஒளியும் அத்துவிதப்படுதற்கு வழி.

ஆறத்துவாவையும் 'தத்துவம்' என்றே சொல்லிவிடலாம். தத் — அது; இறையொளி. 'துவம்' என்பது முன்னிலைப் படுபவைகளைக் குறிப்பது; அவை அத்துவாக்கள். அவை யனைத்தையும் இறையொளி ஊடுருவுவதால், அனைத்தும் தத்துவமேயாம்.

அனைத்தும் தத்துவமேயாக, அர்த்தப் பிரபஞ்சத்தி னொருபகுதியைத் 'தத்துவம்' என வழங்குவது, அப்பகுதி உயிர் உய்தியடைதற்கு இன்றியமையாச் சிறப்புடைய தனாலேயாம். அர்த்தப் பகுதியிலே தத்துவம் போல, சத்தப் பகுதியில் 'வன்னம்' உயிரின் அறியாமையைப் போக்கு வதற்கு முதற்கண் வேண்டப்படும் உபகாரமாம்.

'ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே'

என்ற திருமந்திரம் தொடக்க உபகாரத்தை வலியுறுத்து கின்றது.

தத்துவ உபகாரமும் வன்ன உபகாரமும் ஒரு அளவு சிந்திக்கத்தக்கவை.

தத்துவம் முப்பத்தாறு. அவை சிவதத்துவம் வித்தியா தத்துவம் ஆன்மதத்துவம் என முத்திறப்படும்.

சிவதத்துவம் ஐந்து. வித்தியாதத்துவம் ஏழு. ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு. மொத்தம் முப்பத்தாறு.

வித்தியாதத்துவம், உயிரை மூடியிருக்கும் பஞ்ச கோசங்களில் முதல் இரு கோசங்களைக் கொண்டது. முதற் கோசம் ஆனந்தமய கோசம். இக்கோசத்தை இறையொளி ஊடுருவும்போது உயிரில் ஒருவித உயிர்ப்புண்டாய், தாளுெரு வஸ்து என்கின்ற களிப்புண்டாகும்.

இரண்டாவது கோசம் விஞ்ஞானமய கோசம்; மிகமிக முக்கியமானது. இக்கோசம் ஐந்து உள்ளுறைகளைக்

கொண்டது. அவை, காலம் நியதி கலே வித்தை அராகம் என்பன. இவற்றில் கலே வித்தை அராகம் முக்கியமானவை; உயிரின் அறிவு இச்சை செயல்கள் விருத்தியுறுதற்கு உப காரமானவை.

செயல், அறிவு, இச்சை என்ற கிரமத்தில் விருத்தி யுறுதலின், கலே, வித்தை, அராகம் எனப்பட்டன.

துயில்வோனேத் தட்டி எழுப்பி, அறிவு வரச் செய்து, விருப்பத்தை வினவுகிருேம்.

கலே — கலித்தல்; தட்டி எழுப்புதல். வித்தை — அறிவு. அராகம் — இச்சை.

இக்கிரமம் அருள்ஒளி உயிரைத் தீண்டுதற்குப் பயன் படும் தத்துவக் கிரமம்.

அறிவு சற்றே அரும்பத் தொடங்கியதும், அறிவு, இச்சை, செயல் என்ற கிரமத்தில் குறிப்பிட்ட மூன்று தத்துவங்களும் பயன்படும்.

மத்தியில் உள்ள இச்சையை, அருள் ஒளியுந் தூண்டும்; அறிவு அறியாமைகளுந் தூண்டும்; அறிவறியாமைகள் மாயையாலும் ஆணவத்தாலும் வருபவை.

இச்சை, கர்ம மூலமாய்க் கர்மத்தைப் பெருக்குவதோடு, அறிவையும் தன்வசப்படுத்தும். அதே சமயத்தில், அருள் ஒளி ஊடுருவுவதால், அறிவானது, தவறுகளே உணருஞ் சத்தியுடையதாயுமிருக்கும்.

அறிவுக்குத் தவறுகளே உணரும் சத்தி பிறத்தற்கு, ஆன்ம தத்துவம், மனேமய பிராணமய அன்னமய கோசங் களே உதவி, உபகரிக்கும்.

அகக்கரண புறக்கரண தத்துவங்கள், அறிவு விஸ்தரித் தற்குப் பேருதவி புரியும்.

மனம் என்ற தத்துவம், அகக்கரண புறக்கரணங்களுக்கு ஏகப் பிரதிநிதி.

புறக்கரணங்கள் புறத்தே அறிந்தவைகளை, அகக்கரணங்களுக்கு அறிவிப்பது மனம்.

கண் கண்டதைச் செவி அறியாது. இவ்வாறே புறக்கரணம் ஒவ்வொன்றும், ஒன்றறிந்ததை மற்றொன்று அறியாது.

மனம், பொறிகள் தனித்தனி அறிந்தவைகளைத் தானறியும் சத்தி வாய்ந்தது.

மனத்தைப் பக்குவப் படுத்தாவிடின் மனம் தான் அறிந்தவைகளைக் கர்மத்துக் கேற்பப் பிறழ்வு செய்து, உட்கரணங்களுக்கு அறிவித்து, அவை மூலம் உயிர் அறிவையும் கெடுத்துவிடும். மனத்தின் சஞ்சாரத்தில் வெகு கவனம் வேண்டும்.

அறிவின்வழி பெரும்பாலும் மனம் நிற்பதில்லை. காரணமென்னை? 'தந்தவன்தன் ஆணை' என்கின்றது சித்தியார்.

தத்துவங்களைத் தந்தவன், தத்துவமாயிருப்பவன், அந்த இறைவன்.

இறைவன்வழி நின்று, மனத்தில் மாசு படியாமற் பாது காத்தல் வேண்டும்.

'மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்' என்கின்றார் வள்ளுவர்.

மனமாசு நீங்கியவர்களுக்கே, உயிரின் அறிவொளிக்கு இறையொளியின் தொடர்பின் இன்றியமையாமை புலப்படும்; கர்ம மூலமான இச்சை சுத்தப்படும்.

'இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே'

என்கின்ற திருமுருகில், 'முன்னிய வினை'யாவது, வீடுபேறு. அஃதாவது, அத்துவித வஸ்துவோடு உயிர், அத்துவிதப்படுதலாம்.

# அத்வைத சிந்தனை — 5

## தத் துவமும்; துவம் தத்தும்

*தத் துவம் — அது நீ ;*

*துவம் தத் — நீ அது.*

*அது நீயாயிருக்கிறது ; அது இறைவன்.*

*அவ்வாறே,*

*நீ அதுவாதல் வேண்டும். அது கைகூடுவதாயில்லை.*

*காரணம் என்னை ?*

*நீ, ஆணவமான அதுவாயிருக்கின்றாய் ; அப்படியிருப்பதுதான், நீ இறைவனோடு அத்துவிதப்படாமலிருத்தற்குக் காரணம்.*

* * *

*இறைவன் உன்னோடு அத்துவிதப்பட்டு நீயாயிருக்கின்றான்.*

*அவ்வாறு,*

*ஆணவ இருள் உன்னோடு அத்துவிதப்பட்டு நீயாயிருக்கவில்லை. நீதான் இருளோடு அத்துவிதப்பட்டு இருளாயிருக்கின்றாய். இருளாயிருக்கும் இந்நிலை, உனக்கு அநாதியிலேயே அமைந்தது. ஆயினும் இந்நிலை, நிலையானதன்று. ஒரு காலத்தில் நீ அதுவாய், இறைவனோடு அத்துவிதப்படுதல் கைகூடும். அது — இறைவன். அது கைகூடியவழி அந்நிலை நிலையானதாம்.*

*ஆணவம் — இருள் ;*

*இறைவன் — அருள்.*

உயிர்க்கு இருளோடத்துவிதம் அநாதி; அருளோடத்துவிதம் ஆதி.

இந்த அநாதியும் ஆதியும் சிந்திக்கவேண்டியவை.

*　　　*　　　*

'அது நீ' (தத் துவம்); முன்னிலை வாய்பாடு. அவ்வாறே, 'அது நான்' தன்மை வாய்பாடு.

*　　　*　　　*

அது நானுயிருக்கிறது; அவ்வாறே, நான் அதுவாதல் வேண்டும். அது இதுவாயிருக்கிறது; அவ்வாறே, இது அதுவாதல் வேண்டும். இது என்றது உயிரை.

*　　　*　　　*

'அது நீயாயிருக்கிறது; நீ அதுவாயிருக்கவேண்டும்' என்கின்ற முன்னிலை வாய்பாடுகள் முக்கியமானவை. அவற்றில் ஏனைய தன்மை படர்க்கை வாய்பாடுகள் அடங்கும். அடங்குமாறு காண்போம்.

*　　　*　　　*

'அது நீ' என்ற முன்னிலை வாய்பாட்டோடு, 'அது நான்', 'அது இது' என்ற தன்மை படர்க்கைகள், இட வேறுபாடன்றிக் கருத்து வேறுபாடின்றி இருத்தல் காண்க.

அவ்வாறே, 'நீ அது' என்ற வாய்பாட்டோடு. 'நான் அது', 'இது அது' என்னும் தன்மை படர்க்கைகள் இட வேறுபாடன்றிக் கருத்து வேறுபாடின்றி இருத்தல் காண்க.

ஆகவே,

'அது நீ' என்னும் 'தத் துவ'மும், 'நீ அது' என்னும் 'துவம் தத்'தும் முக்கியமானவைகள்; ஏனை யிடங்களை அடக்குபவைகள்.

*　　　*　　　*

இனி, இறையத்துவிதம், அத்வைத விளைவாய், உயிர்க் குறுதி செய்வது பற்றியும்,

உயிரத்துவிதம், அத்வைத நிலையாய், அந்நிலை, மேற் குறிப்பிட்ட விளைவால், நிலை பெயர்க்கப்படுதல் பற்றியும் சிந்திப்போம்.

'விளைவு', 'நிலை' என்ற வார்த்தைகள் குறிப்பிட்டுணர வேண்டியவைகள்.

'விளைவு' இறையைச் சேர்ந்தது;

'நிலை' உயிரைச் சேர்ந்தது.

'இறை' சார்பைத் தன்வண்ணமாக்குவது. அத்துவித வஸ்துவாய் உயிராயிருந்தாலும், மெல்ல மெல்ல உயிரின் நிலையை மாற்றித் தன்வண்ணமாக்குவது.

'உயிர்' சார்ந்ததன் வண்ணமாவது; இருளைச் சார்ந்து இருளாயிருப்பது; அருளைச் சார்ந்து அருளாயிருக்க வேண்டியது. இறைவிளைவால், இருளிலிருந்து எடுக்கப்பட்டு, அருள் நிலைக்கு உயர்த்தப்படுவது.

* * *

உயிரத்துவிதம் இறையத்துவிதம் என்னும் இவை, தம்முள் வேறுபாடுடைமை காட்டப்பட்டது. எனினும், மேலும் தெளிவுபடுத்த முயல்வோம்.

உயிரத்துவிதம் அனைத்தும் 'துவம் தத்'; இறையத்து விதம் அனைத்தும் 'தத் துவம்' என்பதை மேலும் வலிசெய் வோம்.

உயிரின் ஆணவ அத்துவிதம் எப்படித் 'துவம் தத்' தோ, அப்படியே அருளோடு அத்துவிதப்படுதலும் 'துவம் தத்' தாம்; நீ அதுவாதல் என்றவாறு.

இனி, மாயையை எடுத்துக்கொள்வோம். மாயாயந்திர தநுவாகிய இவ்வுடற் குடிலில் உயிர் அத்துவிதப்படுதல் 'துவம் தத்' தாம்; இது அதுவாம் என்றவாறு. இது — உயிர்; அது — உடல்.

உயிர்ப்பொருட்டு, உயிர்க்குயிராகிய இறை, உடலோடு அத்துவிதப்படுதல் 'தத் துவ' மாம்; அது இதுவாம் என்ற வாறு. அது — இறை, இது — உடல்.

உயிர் உடலோடு அத்துவிதப்படும் பொருட்டு, உயிர்க்குயிர் உடலோடு அத்துவிதப்படும். அஃதாவது, உயிரும் உயிர்க்குயிரும் உடலோடு ஒருங்கு அத்துவிதப்படும் என்றவாறு. இவ்வத்துவிதத்தில் உயிரத்துவிதம் 'துவம் தத்'; உயிர்க்குயிரத்துவிதம் 'தத் துவம்' என்பது உய்த்துணரற்பாலது.

* * *

இறைவன் 'தயாவான தத்துவன்' என்பது திருவாசகம். தத்துவனின் தயையாவது, உடலை அநுக்கிரகித்து, அறிவைப் பிரகாசிக்கச் செய்து, உயிரைத் தன்னோடத்துவிதப்படுத்தலாம்.

தத்துவனின் தயைதானே
அத்வைத விளைவு.

இதன் சாரம் பின்வருமாறு :

இறைவன் உயிரோடத்துவிதப்பட்டிருப்பதும், மாயையோடு அத்துவிதப்படுதலும்,

அத்துவித விளைவாய், தத்துவமாம்; அது நீயேயாதலாம்.

உயிர் ஆணவத்தோடு அத்துவிதப்பட்டிருப்பதும், மாயையோடு அத்துவிதப்படுதலும், பின் அருளோடு அத்துவிதப்படுதலும், அத்துவித நிலையாய், 'துவம் தத்'தாம்; நீ அதுவாதலாம்.

இறை அத்துவித விளைவுக்குப் பயன்: உயிரத்துவித நிலையை நிலைபெயர்த்து, நிலையாய முத்தியில் நிலைக்கச் செய்வதாம்.

நிலையாய நிலையே
அத்துவித முத்திப்பேறு.

# அத்வைத சிந்தனை — 6

## உடனுறுதலின் உயர்தனிச் சிறப்பும், ஒன்றுதல் வேறுதல் உபகாரங்களும்.

அத்துவிதம், உயிர்க்குயிராகிய இறை அத்துவிதம், உயிரத்துவிதம் என இருவகைப்படும். முன்னையது விளைவு; பின்னையது நிலை.

முன்னையதன் விளக்கம்:

அது நீயாதல்; தத் துவம்.

பின்னையதன் விளக்கம்:

நீ அதுவாதல்; துவம் தத்.

'தத் துவம்', 'துவம் தத்' ஆகிய இருவகை விளக்கத்தையும் தரும் சிறப்பு வாய்ந்தது 'உடனுறுதல்'. 'உடனுறுதல்' விளைவுமாம்; நிலையுமாம். ஆகவே உடனுறுதலின் விளக்கம் இருவகையாம். இத்துணையும் முந்திய உரைகளால் அறிந்தவை; அறியவேண்டியவை.

* * *

இனி, 'ஒன்றுதல் வேறுதல்', இறை அத்துவித விளைவின் விளக்கமாதலும்; அவை உபகாரம் எனப்படுதலால், உபகாரத்தைப் பெறும் உயிரத்துவித நிலையின் விளக்கமாகாமையும் அறியற்பாலனவாம்.

உபகரிப்போன் இறை; உயிர்க்குயிர். உபகரிப்பைப் பெறுவது உயிர்.

* * *

இனி, ஒன்றுதலை எடுத்துக்கொள்ளுவோம். ஒன்றுதல் என்றால் என்ன?

இறைவன், 'அத்துவித வஸ்து'. இந்த அத்துவிதம் அநாதியானது. அநாதியில் ஒன்றுபட்டிருத்தல் மாத்திரை யின் அமைதலின் அந்த அநாதி அத்துவிதம் 'ஒன்றுதல்' எனப்படும். அந்த ஒன்றுதலின் விளைவே, உயிர் உய்திகூடி, இறையோடத்துவிதப்படுதற்கு, மூல முளையாய் இருத்தலின், அவ்வொன்றுதல், 'ஒன்றுதல் உபகாரம்' எனப்பட்டது.

ஒன்றுதல் உபகாரம், இறையின் அநாதி அத்துவித விளை வின் விளக்கம். ஆகவே, இவ்வொன்றுதல், உடனுதலே யாம். உடனுதல் விளைவு விளக்கம் என்றவாறு.

உடனுதல் விளைவுதான் ஒன்றுபட்டிருத்தல் மாத்திரை யாய் அமைதலின், ஒன்றுதல் எனப்பட்டதென மேலும் விளக்கம் காண்க.

மேலும், இறையத்துவிதம் உயிரத்துவிதம் ஆகிய அத்து விதம் அனைத்தும் உடனுதலேயாம் என முன் விளக்கம் செய்ததையும் ஞாபகப்படுத்துவோமாக.

ஆகவே, 'ஒன்றுதல்' உடனுதலாய், அஃதாவது உட னுதல் விளைவாய் அதில் அடங்குமாறு காண்க.

* * *

இனி, 'வேறுதல் உபகாரம்' பற்றிச் சிந்திப்போம்.

'வேறுதல்' என்றால் என்ன?

வேறோர் அத்துவிதம் உள்ளதாதல் என்பது, 'வேறுதல்' என்பதன் கருத்து.

அத்துவிதவஸ்துவாகிய இறைக்கு, தான் அத்துவிதப் பட்டிருக்கும் உயிர், தன்னோடு அத்துவிதப்படும்பொருட்டு, மற்றொன்றாகிய மாயையோடு அத்துவிதப்படவேண்டுதல் நேருகின்றது.

தன்னோடு தொடர்புறுதல் இயலாதிருக்கும் உயிர்க்கு அது கைகூடும்பொருட்டு, புறம்பாக மற்றொன்றோடு நடக் கும் அத்துவிதம், இவ்வத்துவிதம்; அதனால் இது, 'வேறுதல்' உபகாரமாம்.

இதனை மேலும் விளக்குவோம்;

ஒரு தலைவன், தலைவியோடு ஒன்றுபட்டிருந்தவன், சற்றே பிரிந்து சென்று ஒரு வீடு அமைக்கின்றான். வீடு அமைக்கும் போது, அவளை விலகி, வேறாய் நின்று அமைக்கின்றான்.

அத்துவிதவஸ்துவாகிய இறைவன் எங்குமாயிருப்பவன். அவன், உலகியல் தலைவன்போல பிரிந்து சென்று, ஒன்று செய்ய வேண்டியதில்லை; உயிரோடு ஒன்றுபட்டிருந்து கொண்டே வேறாயுமிருப்பன்.

உயிர் உய்யும்பொருட்டு, இறை, மாயையோடு அத்து விதப்படுவது உயிர்த்தொடர்பின்றி நடப்பதால் வேறுதலாம்; உயிர்க்கு உய்தி நல்குதலின் அது 'வேறுதல்' உபகாரமாம்.

'வேறுதல்' என்பது இறையின் மற்றொரு அத்துவிதத் தைக் குறித்தலின், அத்துவித விளைவாய், தத்துவமாய், 'அது நீ' ஆதலாம். நீ என்றது இங்கே மாயையை.

ஆகவே, இவ் வேறுதல், அத்துவித விளைவு விளக்கமாய், உடனுதல் விளைவு விளக்கமாம்.

ஆகவே, ஒன்றுதல் வேறுதல், உபகாரங்கள், உடனுதல் விளைவு விளக்கமாய் அதில் அடக்கமாம்.

எனவே இறை அத்துவித விளைவு விளக்கமான உடனுதல், தொடக்கத்தில் ஒன்றாய், இடையில் வேறாயிருக்கும். அதன் மேல், மாயாயந்திர தநுவை உபகரிக்கும்போது, அஃதாவது உடற் குடிலிற் குடிபுகும்போது அவ்வுபகாரம் 'உடனுதல்' என்றே உரைக்கப்படுவதாம்.

மேலும் சிந்திப்போம்: இங்கே 'உடனுதல்', உபகாரம் எனப்படுதலால், அது இறையத்துவித விளைவின் விளக்கமாம்.

உடற் குடிலில், உயிரின்பொருட்டு, உயிர்க்குயிர் உடற் குடிலோடு அத்துவிதப்படும்; இது, இறையத்துவித விளைவு. அவ் விளைவுக்குப் பயன்; உயிர், உடற் குடிலோடு அத்துவிதப் படுதல்; அது உயிரத்துவிதநிலை.

இறையத்துவித விளைவுக்கும், உயிரத்துவித நிலைக்கும், 'உடனுதல்' விளக்கமாம்.

ஆகவே, உயிர்க்குயிர் உடலோடு அத்துவிதப்படும் என்றால், உயிரும் உடலோடு அத்துவிதமாம் என்பது பெறப்படும்.

உயிர்க்குயிரின் உடலத்துவிதம் விளைவாயும், உயிரின் அத்துவிதம், அத்துவித நிலையாயும் இருக்கும்.

முந்தியது, 'தத் துவம்';

பிந்தியது, 'துவம் தத்'.

* * *

உயிர்க்குயிர் அத்துவிதம், உயிரத்துவிதம் அனைத்துக்கும், 'உடனுதல்' விளக்கமாம்; இது முன்னும் சொல்லப்பட்டது.

உயிர்க்குயிரத்துவிதம் 'விளைவு' ஆதலின், அதன் விளக்கமான 'உடனுதல்' உபகாரமாம். அன்றி, ஒன்றுதல் வேறுதல், 'உபகாரம்' எனப்படுதலின், அவை 'உடனுதல்' உபகாரத்தின் சிறப்புப் பெயர்களாம்,

* * *

ஒன்றுதல், உபகாரத்தால், அசைவு பிறந்த உயிர்க்குச் சற்றே விழிப்புண்டாம். பின் வேறுதல், உடனுதல் உபகாரங்களால் உயிர்க்கு, உயிர்க்குயிரோடு நிலையாய அத்துவித முத்தி நிலை சித்தித்தற்கு வழிபுலமாம்.

அன்றி,

ஒன்றுதல் உபகாரத்துக்கும், உயிர் இருளில் ஒன்றுபட்டிருத்தற்கும், வேற்றுமை காண்க. அன்றி, அவ்வுபகாரத்தால், ஒன்றுபட்டிருக்கும் நிலையில் அசைவு பிறத்தலும் காண்க.

இவ்வாறே,

வேறுதல் உபகாரத்துக்கும், உயிர் இருளிலிருந்து சிறிதே விழித்து வேறுபடுதற்கும் வேற்றுமை காண்க. அன்றி, அவ்வுபகாரத்தால் உயிரின் நிலை வேறுபடுதலும் காண்க,

அப்பால், உடனாதல் உபகாரத்தால், விளைவையும், அதனால் உயிரின் நிலைமாற்றத்தையும் ஊகிக்கலாம்.

ஆகவே, அத்துவித வஸ்துவாகிய இறைவன், தயாவான தத்துவனாய், ஒன்றாய் வேறாய் உடனாய், உயிர், தன்னோடு உடனாதற்கு உபகரிக்கின்றான் என்றவாறு.

* * *

இவ்வுபகாரங்களால், இருளில் ஒன்றுபட்டுக் கிடந்த உயிர், வேறுசெய்யப்பட்டு, இறையோடு நிலையாய உடனாதல் நிலை, கைகூடும் என்க.

இது முடிந்த முத்திநிலையாம்.

இந்நிலையில், உயிர்க்குயிராகிய இறைவன், தானே தானா யிருப்பன்; 'அது அதுவாயிருக்கும்' என்றவாறு.

இது, அது 'வாக' அது, அது 'வாம்' என்க. இது—உயிர்.

# அத்வைத சிந்தனை — 7

I. இறைவன் உயிர்க்குயிர்; உயிரோடு அநாதியிலேயே அத்துவிதப்பட்டிருக்கிறான்.

அத்துவிதமாவது பிரித்தறிய ஒண்ணாத இருபொருட் கூட்டரவு.

இறைக்கு உயிரோடு உளதாய அத்துவிதம் நித்திய மானது.

II. உயிர், தன்னோடு அத்துவிதப்பட்டிருக்கும் இறை யோடு அத்துவிதப்படவேண்டியது; அத்துவிதப்படுகின்றிலது.

உயிர், அநாதியிலேயே அறியாமை இருளில் முழுகிக் கிடக்கின்றமையின், இறையோடு அத்துவிதப்படுகின்றிலது.

III. இறை, பேரொளிப் பிழம்பு; அதனைத் தாங்கு மாற்றல் உயிர்க்கில்லை. ஒளிப்பிழம்பும் உயிரைக் குருடு படுத்தி விடுகின்றது.

இங்ஙனமாக, உயிரின் கதி பற்றி ஏங்கும் நிலை நேரு கின்றது.

IV. உயிரிடத்தில் அறிவு பிரகாசிப்பதொன்றே அறி யாமை யிருளிலிருந்து விடுபடுவதற்கு வழி; ஒரேஒரு வழி.

V. உயிருக்கு அறியுந்தன்மை யுண்டு. அதனை அறி வொளி என்று வைத்துக்கொள்ளுவோம். உயிரின் அறிவொளி இறையொளியாகிய அருளொளியோடு அத்துவிதப்பட்டு, அருளொளி அறிந்துகொண்டிருப்பதைத் தானும் அறிவ தன்றி, அருளொளியின் உபகாரமின்றி, உயிரின் அறிவொளி எதனையும் அறியாது; அறிதற்கு அருளொளியோடு அத்து விதப்பட்டே தீரவேண்டும்.

பேரொளியைத் தாங்குமாற்றல், தனக்கின்மையால், தன்னைக் குருடு படுத்தும் இறையொளிப் பிழம்போடு, உயிரின் அறிவொளி அத்துவிதப்படுத்தப்படுவதெங்ஙனம் என்ற வினு எழுகின்றது.

VI. இதோ விடை வருகின்றது; இறையொளி குருடு படுத்துகின்றதே என்று ஏங்க வேண்டியதில்லை.

பேரொளிப் பிழம்பாகிய இறையொளிக்குச் சிவசத்தி யென்றும் பெயர். அது ஒரு ஞானசமுத்திரம்; கருணைக்கடல். இரங்காமலிருக்கமாட்டாமை அதன் இயற்கை.

கருணைப் பிரவாகமாகிய சிவசக்தி, மாயை என்கின்ற ஒருவகைச் சடசத்தியைப் பயன்படுத்தி, பல மடிப்புக்கள் கொண்ட மாயைத் திரையில் தான் மறைந்து நின்று, பேரொளிப் பிழம்பைத் தணிக்கை செய்து, அவ்வளவிலும் அமையாமல், பல வேறு கவசங்களை உயிருக்கிட்டு, தணிக்கை செய்த தன் ஒளிக்கதிர்களில் மிருதுவானதொரு கதிரை, உயிரை மூடியிருக்கும் கவசங்களை ஊடுருவச் செய்து, உயிரின் அறிவொளியோடு அத்துவிதப்படுத்தி, சிறிதே அறிவை அரும்பச் செய்யும். இச் சிற்றறிவு, அறியாமையிருளிற் கிடைத்ததொரு சிறு விளக்கு.

இவ்விளக்கின் இருப்பிடம் இந்தச் சரீரம். இச்சரீரம் உயிரின் வெளிப்புறக் கவசம். இக்கவசத்துக்கு அன்னமய கோசம் என்று பெயர்.

இச்சரீரத்துட் பிரகாசிக்கும் அறிவு விளக்குச் சுட்டிறந்த பொருள்களைக் காட்டாது; அன்றி, இருட் கலப்பால் மயக்க அறிவையுந் தரும்.

இச்சரீர விளக்கைப் பேணுகிற முறையில் பேணுபவர்கள், அறியாமை இருள் விடியப்பெற்று, சரீர உதவி யின்றியே, பேரொளிப் பிழம்பைத் தாங்கும் ஆற்றலை அடைவார்கள். அவ்வித ஆற்றல் படைத்த உயிர், தன்னோடு அத்துவிதப்பட்டிருக்கும் உயிர்க்குயிரான இறையோடு அத்துவிதப்படும். இது முடிந்த முத்திநிலை. இது, எளிதிற் கிடைப்பதன்று.

VII. முத்திக்கு வித்தான இச்சரீரம், சத்தமும் அர்த்தமுமான இரு பிரபஞ்சக் கூட்டரவு.

சத்தம்: மந்திரம், பதம், வன்னம் என மூன்று வகை. அர்த்தம்: கலை, தத்துவம், புவனம் என மூன்று வகை. ஆறும் அத்துவா எனப்படும்.

அத்துவா—வழி; இறைவனை அடைதற்கு வழி,

அத்துவாக்களாலான சரீர விளக்கில் கயிற்றரவுகளே காட்சியளிக்கின்றன. அவைகளே காணப்படும் பிரபஞ்ச விநோதங்கள்.

பிரபஞ்ச விநோதங்களைக் காணும்போது அவற்றில் இச்சை பிறக்கிறது.

இச்சை கர்ம மூலம். கர்மம், இருவினைகளைத் தருதலால் உயிர் பிறவிக் கடலில் ஆழ்ந்து, அலைந்து, அலுக்கும்போது இருவினை ஒப்புப் பிறக்கலாம். அதனால், ஆணவம் வலி குன்றும். குன்ற, உயிர் பக்குவம் எய்தி, மாயையின் உதவியின்றியே, பேரொளியைத் தாங்கும் ஆற்றல் தலைப்படும். அப்பொழுது கர்ம மூலமான இச்சை, இனிய இச்சையாகும்.

'இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதிநீ முன்னிய வினையே' என்பது திருமுருகு.

இன்னசை—இனிய இச்சை. முன்னிய வினை—வீடுபேறு.

VIII. இன்னசை வாய்த்த பக்குவ உயிர், இறையாகிய கயிற்றைக் காணும் அக்கணமே சரீரமுட்படப் பிரபஞ்சமாய்க் காணப்பட்ட கயிற்றரவுகள், கனவாய்ப் பழங்கதையாய் மறையும்.

IX. இல்லையாய் மறையும் கயிற்றரவுகளே, கயிருகிய இறையைக் காண வைப்பவைகள் என்பதை மறக்கக்கூடாது.

'இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்ற ஆறு' என்பது திருவாசகம்.

கயிற்றரவுகள்தாம் கயிருகிய இறையோடு உயிர் அத்துவிதப்படுதற்கு வழிசெய்பவை.

பிரமசூத்திரத்தில் இரண்டாவது சூத்திரத்தில் 'எங்கிருந்தும் இதன் தோற்றம் முதலியன' என்று பிரபஞ்ச விநோத அரவுகளை ஆராய்வதை நினைவு கூருவோம்.

**X.** இந்த, உயிரத்துவிதத்துக்கும், உயிரோடு உயிர்க்குயிருக்கு உளதாய அத்துவிதத்திற்கும் வேறுபாடு பெரிது.

அத்துவித நிகழ்ச்சியை விளக்கஞ் செய்யும் விளக்கங்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் உள்ள மகாவாக்கியங்கள்.

'தத்துவமசி', 'துவந்தத்தசி' என்ற மகாவாக்கியங்களில்

'தத் துவம்' இறையத்துவிதத்துக்கும், 'துவம் தத்' உயிரத்துவிதத்துக்கும் விளக்கங்கள்.

தத் துவம்—அது நீ;
துவம் தத்—நீ அது.

இறையாகிய 'அது', நீயாயிருக்கிறது; நீ, 'அது'வாதல் வேண்டும் என்றவாறு.

இந்த இரு விளக்கங்களையும் தரும் சிறப்புடையது 'உடனுதல்'.

அதனுடன் அதுவாதல் என்றவாறு.

அது, உன்னுடன் நீயாதலும், நீ அதனுடன் அதுவாதலுமாம்.

தத் துவமுமாம்;
துவம் தத்துமாம்.

**XI.** இறையத்துவிதம் உயிரத்துவிதம் இரண்டனுள்,

இறையத்துவிதம் பயன் செய்வது. அந்தப் பயனைப் பெறுவது உயிரத்துவிதம். பயனைப் பெறுவதாவது: அறியாமை இருள் நிலையிலிருந்து, மாற்றம் பெற்று உயர்வதாம்.

**XII.** இறையத்துவித விளைவே, உயிரத்துவித நிலையை மாற்றம் செய்வது. இதனுல், இறையத்துவிதத்தை 'விளைவு' என்றும், உயிரத்துவிதத்தை (மாற்றமுறும்) 'நிலை' என்றும் வைத்துக்கொள்ளுவோம்.

'விளைவு', 'நிலை' என்ற குறியீடுகள் நினைவிலிருக்கட்டும்.

XIII. ஆகவே,

இரு வகை அத்துவிதத்துக்கும் பொதுவான,

'உடனுதல்', விளைவுமாம்; நிலையுமாம்.

இறையத்துவிதம், 'உடனுதல்' விளைவு; உயிரத்துவிதம், 'உடனுதல்' நிலை.

'விளைவு', உபகாரம்; 'நிலை', உபகாரத்தைப் பெறுவது.

XIV. 'ஒன்றுதல்', 'வேறுதல்', உபகாரங்கள். அவை, இறையத்துவித விளக்கமாகிய 'உடனுதல் விளைவின்' சிறப்புப் பெயர்கள்.

அநாதி கேவலத்திலே இறையத்துவித விளக்கமாகிய 'உடனுதல் விளைவு' ஒன்றுபட்டிருத்தல் மாத்திரையின் அமைதலின் 'ஒன்றுதல்' எனப்பட்டது.

சகலத் தொடக்கத்தில் மாயையோடு இறையத்துவித மாகிய 'உடனுதல் விளைவு' உயிர்ச் சம்பந்தமின்றி நிகழ்தலின் 'வேறுதல்' எனப்பட்டது.

இவ்வாற்றால், உடனுதல் விளைவின் சிறப்புப் பெயர்கள், ஒன்றுதல் வேறுதல் உபகாரங்கள் என்றறிக.

உடனுதல் நிலைக்குச் சிறப்புப் பெயர்கள் இன்மையுந் தெளிக.

XV. இனிச் சகலத்தில் நிகழும் 'உடனுதல்' சிந்தனைக் குரியது.

சகலத்தில், உடற் குடிலில் உயிர்க்குயிராகிய இறையும், உயிரும் ஒருங்கு குடிபுகும்.

உயிர்ப்பொருட்டுக் குடிபுகும் இறைக்கு உடலோடு உளதாம் அத்துவிதம், 'தத் துவ' மாம்; உடனுதல் விளைவாம். உயிர்க்கு உடலோடு உளதாம் அத்துவிதம், 'துவம் தத்' தாம்; உடனுதல் நிலையாம்.

இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உபகரிக்கின்றான்.

இவ்வுபகாரத்தைப் பெறுகிற முறையில் பெற்றுப் பயனடையும் பக்குவ உயிர் கேவல சகல நிலை போய், சுத்த அவஸ்தை அடையும் போது தன்னோடத்துவிதப்பட்ட உயிர்க் குயிரான இறையோடு அத்துவிதப்படும்; அது, 'துவம் தத்' தாகிய உடனுதல் நிலையாம்.

அப்பொழுது, இதுகாறும் தத்துவனாய் நின்று உபகரித்த இறைவன் 'தத் துவ' நிலை போய்த் தானே தானவன்; 'தத் தத்' தாம்.

இது அதுவாக, அது அதுவாம் என்றவாறு. இது—உயிர்.

இது அதுவாதல், சிவமயமாதலாம் என்று கூறும் வேதாந்தத் தெளிவாகிய சைவசித்தாந்தம்.

சைவசித்தாந்தம் சுத்தாத்துவித சைவசித்தாந்தம் எனவுங் கூறப்படும். சுத்தாத்துவிதம் என்பதில் சுத்தம், 'கேவல சகல சுத்தம்' என்பதில் வரும் சுத்தாவஸ்தை.

உயிர், சுத்தாவஸ்தை உறும்போது, இறையோடு அத்துவிதமாம் என்க.

உயிரத்துவிதம் 'ஏகம்' எனவும், சிவாநுபவம் விளைதலின் 'இன்பக் கூடல்' எனவும் படும்.

'உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கே உரித்து' என்ற சித்தியாரும்; 'தாடலை' என்ற திருவருட்பயனும், ஆழ்ந்து சிந்திக்க வேண்டியவை.

# அத்வைத சிந்தனை — 8

## வினைமுதலும்; விதைமுதலும்.

வினை முதல் — இறைவன்;
விதை முதல் — மாயை.

வினை — பிரபஞ்சத் தோற்றரவு வினை.

இறைவன் உயிர் உய்யும் நிமித்தம் சட சத்தியாகிய மாயையைப் பயன்படுத்தும்போது கிடைத்தது, குட்டிப் பிரபஞ்சமாகிய இச் சரீர விளக்கு. இவ் விளக்கினால் சுட்டிறந்த பொருள்களைக் காணமுடியாது; இறையாகிய கயிறு தோன்றாது; பிரமாண்டமான பிரபஞ்சங்களாகிய கயிற்றரவுகளே காட்சியளிக்கும். இருளில் படுகுருடாய்க் கிடந்த உயிருக்கு இச் சரீர விளக்கின் உதவியினால் ஏதோ தோற்றுவதே பெரிய காரியம். ஏதோ தோற்றுவது, சற்றே அறிவுக்கண் வெளிப்படுதற்கு அடையாளம் அல்லவா?

இச் சரீரமே கயிற்றரவு; சத்தமும் அர்த்தமுமான அறுவகை அத்துவாக்களின் கூட்டரவே இச் சரீரம்.

இச் சரீரம் உட்படப் பிரமாண்டமான பிரபஞ்சம் அனைத்தும் அத்துவாக்களின் கூட்டரவே.

* * *

இக்கூட்டரவை முக்கூறு செய்து, 'அவன் அவள் அது எனும் அவை' என்கின்றது சிவஞானபோதம். அவை— கூட்டம்.

'அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின், தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்' என்பது சிவ ஞானபோத சூத்திரம்.

அவன் அவள் அது எனும் அவை, மூவினைமைய— தோன்றி நின்று ஒடுங்குவன; மூவினைமையின் — இங்ஙனம் மூன்றுவகை வினைகளும் நடந்துகொண்டிருப்பதால்; திதி— இப்பொழுதைய நிலை; தோற்றிய திதி—தோற்றத்தின் பின்னர்த்தாய நிலை. ஆகவே அடுத்து வருவது ஒடுக்கம். ஒடுங்கி மீண்டு உளதாம், இவ்வாறு தோன்றி நின்றொடுங்குதற்குக் காரணம் மலம்.

மலத்துளதாம் — மூலமலம் காரணமாக கன்மமலத்துக் கேற்றவாறு, மாயாமலத்தில் உளதாம் என்றவாறு.

தோற்றம் நிலை ஒடுக்கம், மீண்டும் மீண்டும் உளதாம் என்க.

* * *

" நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே "

என்பது ஐங்குறுநூற்றுக் காப்பு.

மூவகையுலகு — தோன்றி நின்றொடுங்கும் உலகு. அவன்தாள் நிழற்கீழ் என்றது அவன் சந்நிதியை. சந்நிதியில் உலகு, மாயைத்திரையில் குமிழி விட்டுக்கொண்டிருக்கும்.

அதனால், அவனே உலகை ஆக்கி நிலைக்கச்செய்து ஒடுக்குகிறான் என்றும் கூறலாம்.

கம்பர், " உலகம் யாவையும் தாமுள வாக்கலும், நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டு " என்கிறார்.

" நீங்கலா அலகிலா விளையாட்டு " என்பது மிக்க கருத்துள்ள தொடர். தோற்றம் நிலை ஒடுக்கம் எப்பொழுதும் நடைபெறும் விளையாட்டு என்றவாறும்.

மிக்க பக்குவர்களுக்கு அஃதாவது உயிர்க்குயிரான இறையாகிய கயிற்றைக் காண்பார்க்குக் கயிற்றரவாகிய உலகு இல்லை; கேவலாவஸ்தையாகிய இருளிற் கிடக்கும் குருடுபட்ட உயிர்களுக்கும் உலகு இல்லை. இந்த இன்மைகளிரண்டும் தம்முள் வேறுபட்டவை. சகலாவஸ்தையின

ரான் — மாயையின் உதவி பெற்றோரான — நம்மவர்க்கே, கயிற்றரவு காட்சியளிப்பதாம் என்க.

* * *

கயிறு தன்னை நோக்குவாரில்லாத இடத்தில் பாம்பு விடுவதில்லை. பாம்பு—அரவு. அவ்வாறே, மாயையும் உயிர்க்கு உபகரியாமலிருக்கும்போது, அதன்பால் பிரபஞ்சம் முளைப்பதில்லை.

உயிர்க்குயிராகிய இறை என்கின்ற கயிறு, உயிரைத் தன்னோடு இணைத்தற்கு மாயையை உபகரிக்கும்போதுதான் — உயிர் சற்றே விழிக்கும் போதுதான் — கயிற்றைக் காண முடியாத நிலையிலேதான் — பிரபஞ்ச அரவுகள் காட்சியளிக்கின்றன. அவை அத்துவாக்களின் கூட்டரவு; ஒதுக்கற்பாலன அல்ல. ஒரு காலத்தில் கயிருகிய இறையை அணுகுதற்கு வழி செய்பவை அவை.

* * *

அர்ச்சுனன் போர்முனையில் சோர்ந்தான். பாட்டனுக்கும் குருவுக்கும் பாணம் விடுவதா என்று திகைத்தான். பார்த்தசாரதியாகிய கிருஷ்ணனில் பரிபூரண நம்பிக்கையும் அவனுக்கு உண்டு.

கிருஷ்ணன் அவன் சோர்வைப் போக்கி உற்சாகப் படுத்தும் பொருட்டு, கீதை என்கின்ற நீண்ட கயிற்றை, அர்ச்சுனன் செவியில் நுழைத்தான். கீதைக்கயிறு, ஒரு காது வழியாகப் புகுந்து, மற்றக் காதாற் போய்விட்டது. கண்களுக்குக் கயிற்றரவுகளே காட்சியளித்தன.

> " மாயையென் றொருத்தி தன்பால்
> மனமெனும் மைந்தன் தோன்றித்
> தூயநல் லறிவன் தன்னைத்
> தோற்றமின் றாக்கி வைத்தான்
> தாயொடு தந்தை மக்கள்
> தாரமென் றிவர்பால் வைத்த
> நேயமும் அவன்ற னாலே
> நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்!"

என்பது கீதையின் சாரம்; வில்லிபாரதத்தில் வருவது.

மாயை, அறுவகை அத்துவாக்கள் என்கின்ற வித்துக்கள் முளைகொள்ளும் விளைநிலம்.

மனம், அறுவகை அத்துவாக்களில் தத்துவ அத்துவாவைச் சேர்ந்தது. அது, அகக்கரண புறக்கரணங்களின் ஏகப் பிரதிநிதி; அருளோடும் மருளாகிய இருளோடும் சம்பந்தப் பட்டது. மாயையே அப்படிப்பட்டது. அருட்சம்பந்தத்தால் நல்லறிவு பிரகாசிக்கும்.

நல்லறிவு, மனத்தைச் சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பா லுய்த்தற் பாலது. சோர்வுறுங் காலத்தில் மனம், அறிவை மயக்கிவிடுவதுண்டு.

அருச்சுனா! மாயையென் றொருத்தி தன்பால் மனமெனும் மைந்தன் தோன்றி,

உனது தூய அறிவை மயக்கிவிட்டான். அதனாலேதான், தாயொடு தந்தை தாரம் என்கின்ற கயிற்றரவுகளைக் கட்டி அழுகின்றாய்.

நானோ, பிறவிதோறும் உன்னைப் பிரியாமல் நன்னெறிப் படுத்திவருகின்றேன். 'முன்னொரு பிறப்பில் நாமே இராம லக்குமப் பேர் பெற்றோம்'; அதற்கு முன்னும் 'நரனு நாரணனுமானோம்' என்று போதித்ததோடமையாமல் விசுவ ரூபத்தையும் காட்டினான். எவ்வளவு முயன்றும் அருச்சுனனின் ஆன்ம சிற்சத்தி, கிருஷ்ணனை ஏற்றுக்கொண்டபோதும், கிருஷ்ணனின் கீதா போதனையை ஏற்றுக்கொள்ளவில்லை.

மகான் அரவிந்தர், வேத சமுத்திரம். ஒருசமயம் அரவிந்தர், ஏகான்மவாதிகளை விளித்து, "உங்களோடு வாது செய்ய என்னால் இயலாமலிருக்கலாம்; ஆனால், உங்கள் கொள்கையை எனது ஆன்ம சிற்சத்தி ஏற்கின்றிலது" என்று கூறினார்.

இங்கே காட்டிய ஒப்புமையை வெறும் வாய்பாடு மாத்திரையில் வைத்துக் கொள்ளுவோம்.

அருச்சுனன் பல்லைக் கடித்துக்கொண்டு, கிருஷ்ணன் சொற்படி அழுதழுது பாட்டன் குரு முதலிய கிளைகளை வெட்டிச் சாய்த்தான்.

அபிமந்யு கிருஷ்ணனின் மருகன்; சுபத்திரை புதல்வன்; பாண்டவர்க்கு உயிர். அவன் அபாயச் சங்கை ஊத, இந்த மாயக் கிருஷ்ணன், சும்மா கிடந்த தன் சங்கை ஊதி, அபிமந்யுவை அநியாயமாக மாளச் செய்தான். அருச்சுனன் அக்கினிப் பிரவேசத்துக்கு ஆயத்தமானான். கிருஷ்ணன் தடுத்து அவனைக் கைலைக்கு அழைத்துச் சென்று, தேவ வடிவில் அபிமந்யுவைக் காட்டினான். அருச்சுனன், தைவீக அபிமந்யுவைக் கட்டித்தழுவ முயன்றான். அவ்வடிவு, அருச்சுனன் தீண்டுவதை அருவருத்து, ஒதுங்கிச் சென்றது. அருச்சுனன், தன் புத்திரனின் உயர்நிலையைக் கண்ணுற்றுத் திகைத்தான். அதன் மேல், அபிமந்யுவைக் கொன்றவனையும் கொல்வித்து, புத்திரசோகத்தை ஒரு அளவு தணிவு செய்தான் கிருஷ்ணன்.

எவ்வளவு முயன்றும் அருச்சுனனைத் தன்வழிப்படுத்த முடியவில்லை. பாரதயுத்தம் முடிந்ததும் கிருஷ்ணன் மறைந்தான். அதன்மேல், அருச்சுனனால் காண்டீபத்தை அசைக்கவும் முடியவில்லை; பைத்தியம் பிடித்தவன் போலானான்.

அடுத்த பிறப்பில் அருச்சுனர் கண்ணப்பரானார். கண்ணப்பர் காளத்தியப்பரைக் கண்ணுற்றார்; உடன் நாணன் காடன் தந்தை தாய் தமர் யாவரும் கீதையிற் கூறியவாறு கயிற்றரவுகளாயினர்.

ஒரு சமயம் நாராயணன் இறைவனை ஆயிரம் தாமரை மலர் கொண்டு அருச்சித்தபோது ஒரு மலர் குறைந்தது. உடனே தனது தாமரைக் கண்களில் ஒன்றைச் சாத்தி, சாத்திய கையில் சக்கரம் பெற்று மகிழ்ந்தான்.

கண்ணப்பரோ, தம் கண்மலரை அப்பிக் காளத்தியப்பரேயாயினார்; குருவை விஞ்சிய சீஷர் ஆயினார்.

பிறப்புத் தோறும் அறியாமையேயன்றி, நல்லறிவையுந் தந்து உபகரித்த மாயை, கண்ணப்பர் காளத்தியை அணுகிய அளவில், தன் அபகார உபகாரங்கள் முற்றுப்பெற்று விலக, கர்ம ஒப்பாகிய இருவினையொப்பும் மலபரிபாகமும் கணப் பொழுதிற் கைகூட, அதிதீவிர சத்திநிபாதராய்ச் சுத்தாத்து வித முத்திநிலை எய்தினார் அந்த வேட்டுவக் கண்ணப்பர்.

* * *

" ஆதி பகவன் முதற்றே உலகு " என்பதில் ஆதிபகவனை " முதல் " என்றதும்,

" உலகத்துக்குக் கருத்தா சிவபெருமான் " என்ற சைவவினாவிடையில், சிவபெருமானைக் "கருத்தா" என்றதும்,

பிரபஞ்சமாகிய அரவுகளுக்கு " நிமித்தமாதல் " பற்றியே யாம். கயிற்றரவு கயிற்றின் சந்நிதியில் தோற்றரவு செய்வ தன்றி, கயிற்றின்மீது தோற்றுவதில்லை; அஃதாவது, கயிற்றின்மீது கயிற்றரவு முளைகொள்வதில்லை.

உயிர் உய்யும் நிமித்தம் உயிர்க்குயிராகிய இறை, மாயையாகிய விளைநிலத்தை உயிர்க்குபகரிக்கும்போது அந் நிலத்தின்மீதான, பிரபஞ்ச விதைகளாகிய அத்துவா வித் துக்கள் முளைகொள்ளுகின்றன. இவ்வாற்றால் நிமித்த காரணத்துக்கும் முதற் காரணத்துக்கும் வேற்றுமை தெளிக. இதே சமயத்தில் நிமித்த காரணனுக்கும் முதற் காரணமாகிய மாயைக்கும் உள்ளதாய தொடர்பையும் விளைவையும் சிந் திக்குக. தொடர்பு விசேடமே 'பிரபஞ்ச விளைவு' என்பது மேலே விளக்கப்பட்டது,

இறை, வினை முதல்; நிமித்த காரணன்.
மாயை, விதை முதல்: முதற் காரணம்.

# அத்வைத சிந்தனை — 9

## மாயை—1

மாயையின் வலியோ னாகி மான்முத லோரை வென்றே
ஆயிரத் தோரெட் டண்டம் அரசுசெய் துகநூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்றாள் சென்னி வைப்பாம்.

— கந்தபுராணம்.

"கேவல சகலசுத்தம் என்றமூன் றவத்தை ஆன்மா
மேவுவன்"

— சித்தியார்.

இந்த இரு பாடலையும் மனசில் இருத்துவோமாக.

முதலில் சித்தியார் உரைக்கும் மூன்றவத்தைகள் பற்றி விசாரிப்போம். இங்கே சொல்லப்பட்ட அவத்தைகள் மூலமான காரண அவத்தைகள்.

காரிய அவஸ்தைகள், எண்பத்துநான்கு இலட்சம். இந்த அவஸ்தைகள் பற்றி உயிர்கள் எடுக்கும் தேகம் எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதம். நூறாயிரம் — இலட்சம். தேவர் தொடக்கம் தாவரம் ஈறானவை குறிப்பிட்ட யோனி பேதங்கள்.

காரண அவஸ்தைகளில் கேவலாவஸ்தையை முதலில் எடுத்துக்கொள்வோம்.

கேவலாவஸ்தை அநாதி, உயிர்கள் அநாதி கேவலத்தில் அறியாமையாகிய ஆணவ இருளோடத்துவிதப்பட்டுச் சடமாய்க் கிடக்கும்.

ஆணவத்தோ டத்துவிதப்பட்டிருக்கும் உயிர்களோடு அநாதியிலேயே அத்துவிதப்பட்டிருக்கும் உயிர்க்குயிராகிய இறை, பேரொளிப் பிழம்பு. அவ்வொளியும் உயிர்களுக்கு இருள் செய்துவிடுகின்றது. அவ்வொளியைத் தரிக்குமாற்றல் உயிர்களுக்கின்மையின், அவ்வாறு செய்துவிடுகின்றது. 'ஒளியும் மிக இருளேயாம்', என்பது திருவருட்பயன்.

'ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்' என்பது கொடிக்கவி. ஒன்று என்றது உயிரை. உயிர், அருளொளிக்கும் ஆணவ இருளுக்கும் இடமாயிருக்கின்றது.

'ஒன்று மேலிடின்
ஒன்று ஒளிக்கும்' என்பது கொடிக்கவி.

அநாதியில் உயிர், இருள் மேலிட்டிருக்கும், ஒளியைத் தாங்கும் ஆற்றல் உயிர்க்கின்மையின் 'ஒளி' ஒளிக்கும் எனப்பட்டது. ஒன்று ஒளிக்கும் என்பதில் 'ஒன்று' அருள் ஒளி.

அநாதி கேவலத்தில் சடப்பட்டு, இருளோடத்துவிதப்பட்டிருக்கும் உயிர்; சுத்தாவஸ்தையில், அருளோடத்துவிதப்பட்டு, முத்தி சித்தித்தலைப் பெறும்.

முத்தி சித்திக்கும் என்று வைத்துக்கொள்ளுவோம். இது எப்படிக் கைகூடும்? கேவலாவஸ்தை எங்கே! சுத்தாவஸ்தை எங்கே!

கேவலத்துக்கும் சுத்தத்துக்கும் இடைப்பட்ட வெளி, நேரத்தாலோ, தூரத்தாலோ அளவிடப்பட்டறிய முடியாத, கோடிக்கணக்கான சமுத்திரம் ஒன்றுபட்ட, பெரிய சமுத்திரப் பரப்பாயிருக்கிறது. கேவலத்தில் இந்தக் குருட்டுயிர் குருடு நீங்கி இடைவெளியைக் கடந்து செல்வதெப்படி? கடப்பதற்கு உதவுவதுதான் யாதோ? இறையொளியைத் தவிர்ந்து கடத்தற்குதவுவதும் ஒன்று உண்டோ? என்றெல்லாம் வினவலாம். வினவுக்கு விடை இதோ வருகின்றது:—

இடைவெளி கோடி சமுத்திரப்பரப்பேயாயினும் ஆகுக; அத்துணை ஆகாயவெளிப் பரப்பேயாயினும் ஆகுக; அதனைக் கடப்பதற்கு உபகாரமானதொரு சடசத்தி உண்டு. அதற்குப் பெயர்: 'மாயை'. இது பல துர்க்குணங்களோடு கூடியதாயினும், இருளோடும் அருளோடும் சம்பந்தப்படும் இயல்பினது. இறையொளி இந்த மாயையோடு அத்துவிதப்பட்டு, உயிர்களுக்கு அநுக்கிரகிக்கின்றது. இந்த அநுக்கிரகித்தலால் கேவலாவஸ்தையில் கிடந்த உயிர்களுக்குச் சகலாவஸ்தை கிடைக்கின்றது. எண்பத்துநான்கு நூறாயிரம் பேதமுள்ள உயிர்கள் சகலாவஸ்தையினர்.

இச் சரீரம் உட்பட அறுவகை அத்துவாக்களின் கூட்டரவான பிரமாண்டமான பிரபஞ்சமனைத்தும் இறைவன் அத்துவிதப்பட்ட விசேடத்தால் மாயையில் முளைத்தவை.

அறுவகை அத்துவாக்களில் மந்திராத்துவா ஒன்று.

## மந்திரசக்தி

இளைஞர்களான இராம இலட்சுமணர்கள் பின்தொடரக் காட்டு வழியில் செல்கின்றார் விசுவாமித்திரர். அக்கினி மயமான பாலைவனம் ஒன்று எதிர்ப்படுகின்றது.

விசுவாமித்திரர் இளங்குமாரர்களுக்கு இரங்கி, 'பலை', 'அதிபலை' என்கின்ற இரு வேத மந்திரங்களைக் குமாரர்கள் செவியில் உபதேசித்தார். பாலைவனம், குளிர்ந்த நீர் நிறைந்த தடாகமாய் மாறியது.

எண்ணிறந்த காலம் தவமிருந்து மந்திரங்களைக் காணுகின்ற முனிவர்களுக்கு மந்திர திருஷ்டாக்கள் என்று பெயர். மந்திர திருஷ்டாக்களில் விசுவாமித்திரர் ஒருவர். எவர்கள் எந்தப் பூதத்தின் அதி தெய்வத்துக்குரிய மந்திரத்தைக் காணுகின்றார்களோ அவர்கள் அந்தப் பூதத்தாற் பாதிக்கப்படுவதில்லை.

இங்கே பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய அக்கினியின் அதி தெய்வத்தின் மந்திரத்தைக் கண்ட விசுவாமித்திரமுனிவர் முன்னிலையில் பாலை நிலத்தின் அக்கினி குளிர்ந்தவாறு காண்க.

## வன்னாத்துவா

மந்திரத்தை அடுத்ததொரு அத்துவா வன்னாத்துவா. வன்னம்—எழுத்து.

> ' ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
> ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்'
>
> என்பது திருமந்திரம்.

வேதாதி சமஸ்த சாத்திரங்களும் வன்னாத்துவாவின் காரியப்பாடுகளே. இவற்றால் வரும் ஞானத்துக்குப் பாச ஞானம் என்று பெயர். பாசம் என்றது மாயையை. பாச ஞானத்துக்கு அடுத்தது பசு ஞானம். அதற்கப்பாற்பட்டது, முடிந்த ஞானமாகிய பதிஞானம். பதிஞானம் கைகூடுதற்கு இப் பாச ஞானமே மூல ஞானம்.

> மந்திரம், பதம், வன்னம்,
> புவனம், தத்துவம், கலை

என்கின்ற ஆறு அத்துவாக்களையும் நினைவுபடுத்துவோம்.

அத்துவாக்கள் அனைத்தும் அறிவை விருத்திப்படுத்தற்கே அநுக்கிரகிக்கப்பட்டவை. அறிவை அடுத்து விருத்திப்படுபவை இச்சை செயல்கள். இச்சை பொல்லாதது. இன்னசை வாய்ப்ப தெளிதன்று. நசை — இச்சை மாயையின் உபகாரத்தால், இன்னசை வாய்க்க முயல வழி புலமாம். புலமாகும் வழியை விலகி, அத்துவாக்களால் நமக்குக் கிடைத்தவைகளை, வீண் விரயஞ் செய்து விடுகின்றோம்.

" இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது " என்ற வசனத்தை மனப்பாடஞ் செய்துகொண்டே சரீரத்தை எவ்வாறு பயன்படுத்துகின்றோம் என்று சிந்தித்தால் வீண் விரயம் தெளிவாம்.

இதன்மேல், மாயா புத்திரனாக சூரபத்மனில் வைத்து மாயையை நோக்குவோம்.

# அத்வைத சிந்தனை—9

## மாயை—2

இனி மாயையின் வலியோனான சூரபன்மனைச் சற்றே நோக்குவோம். சூரபன்மன் மாயையின் புதல்வன்; மாயையில் முளைத்த அறுவகை அத்துவாக்களும் அவனுக்கு மாதா வழிச் சொத்து.

"மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" என்பது சித்தியார். அறிவு இச்சை செயல்களை நல்ல முறையில் விருத்தி செய்ய அநுக்கிரகிக்கப்பட்ட மாயை, மயக்கம் செய்வதுமுண்டு என்பது கருத்து. சூரபன்பன் விஷயத்தில் மாயை மயக்கமே செய்தது.

பெரிய யாகமொன்று செய்தற்கேற்ற வாய்ப்புக்களனைத்தையும் செய்துவைத்து சூரபன்மனையும் தம்பிமாரையும் யாகம் செய்ய ஏவி இறைவனிடம் பெரு வரங்களைப் பெறச் செய்தவள் தாயாகிய மாயை.

நூற்றெட்டு யுகம் ஆயிரத்தெட்டு அண்டங்களில் சூரபன்மன் ஆஞ்ஞையே நிலவும் வகையில் வரங்கள் அளித்தருளினான் இறைவன். தேவர்களின் பாவச் சுமையும் அவ்வாறு வரமளித்தற்குக் காரணமென்றுங் கூறலாம். தக்கன் செய்த சிவநிந்தனை மலிந்த யாகத்தில் பங்குபற்றியவர்கள் தேவர்கள்.

பஞ்ச பூதங்களின் அதி தெய்வங்களும், பிரம விஷ்ணுக்களும் யாவரும் சூரபன்மனின் ஏவல்வழி நின்றனர், தேவர்கள் மீன் சுமந்தார்கள்.

இச் செயல்கள் அனைத்தும் தாய் வழிச் சம்பாத்தியங்கள். இனி தந்தை வழியைச் சற்றே நோக்குவோம். சூரனுதியவர் களின் தந்தையார் காசிப முனிவர்; வேதரிஷி.

இவர்கள் பிறந்தபோது சூரபத்மனையும் தம்பிமாரையும் இருத்திக் காசிபர் உபதேசிப்பாராயினர்.

'சான்றவர் ஆய்ந்திடத்தக்க ஆம்பொருள் மூன்றுள' எனப் பதி பசு பாசத்தில் தொடங்கி 'தருமம் என்றொரு பொருள் உளது' என, அதன் அருமை பெருமைகளை வலியுறுத்துவாராயினர்.

வேதத்தின் உபாங்கங்களுள் ஒன்று மீமாம்சை; அது, பூர்வம், உத்தரம் என இருவகை. உத்தர மீமாம்சைக்கு, பிரமசூத்திரம், வேதாந்தம் என்றும் பெயர். பூர்வ மீமாம் சைக்குக் கர்ம மீமாம்சை என்று பெயர். கர்மம் பிரம ஞானத்துக்கு நிமித்தம்.

உத்தர மீமாம்சை 'பிரமத்தை அறிய ஆசை' என்று தொடங்குகின்றது.

பூர்வ மீமாம்சையாகிய கர்மமீமாம்சை 'கருமத்தை அறிய ஆசை' என்று தொடங்குகின்றது. கர்ம மூலம்— தருமம்.

இங்ஙனம் ஞானநிமித்தமாகிய கர்மத்தின் மூலமாகிய தர்மத்தை வற்புறுத்திய காசிபர் அப்பால் தவத்தின் மேன் மையை மார்க்கண்டேயர் சரிதை மூலம் பேசத்தொடங்கி னர்.

உபதேசத்தைக் கேட்டுக்கெண்டிருந்த, பார்த்துக்கொண் டிருந்த மாயை வெடிபடச் சிரித்தாள்.

'என்பெழுந்தியங்கும் யாக்கையரான முனிவர்களின் வற் றல்களாகிய குழந்தைகளுக்குத்தான் உமது உபதேசம் பொருந்தும்; இக் குழந்தைகளோ அசுரர்; உமது உபதேசத் துக்கும் இவர்களுக்கும் வெகுதூரம்'' என்றுதான் சிரித்தாள்.

ஆத்மீக சம்பந்தமான காசிபரின் அருமந்த உபதேசம் நிறுத்தப்பட்டது. காசிபர் விலகினார். மாயையின் உபதேசம் நடந்தது. அதன்மேல், நினைக்கவும் அரிய யாகம் நடந்ததும் வரம்பிலா வரங்கள் பெற்றதும் ஆகிய வரலாறு முன் பேசப்பட்டது. வரம் பெற்றபின் அசுர குருவான சுக்கிரன் உபதேசம் தொடங்கியது,

சூரபத்மனே !

" உற்றதோர் மேன்மைநாடி உன்னைநீ பிரமமென்றே
தெற்றெனத் தெளிதி "

என்பது உபதேசத்தின் ஞானகாண்டம்.

" கொலையொடு களவு காமம் நிலையெனப் புரிதி "
என்பது கிரியாகாண்டம்.

காசிபருக்கு முப்பொருளுண்மை ஞானகாண்டம்; தர்மம் கிரியாகாண்டம்.

'மிண்டிய மாயாவாதம் என்னும் சண்டமாருதமும்' 'உலோகாயத னென்னும் ஒண்டிறற் பாம்பின் கலா பேதத்த கடுவிடமும்' முறையே ஞானமும் கிரியையுமாகச் சுக்கிரனால் உபதேசிக்கப்பட்டன. சூரபத்மன் தனிப்பெரும் பிரமம் ஆயினான். சிங்கன் பராமுகமாயிருந்தான். தந்தையின் உப தேசத்தை நினைவுகூர்ந்தான்போலும். தாரகன் வாளா இருந் தான்.

சூரபன்மனின் புதல்வன் பாநுகோபன் (பாநு–சூரியன்) சூரியகிரணம் கண்ணைத் தாக்கியதைப் பொறுது கோபங் கொண்டு, சூரியனைப் பாய்ந்து இழுத்து வந்து, தான் உறங்கும் தொட்டிலிற் கட்டிவைத்தவன். இது பாநு கோபனின் சிறு குழந்தை விளையாட்டு.

சூரபன்மனின் அருமைச் சகோதரி, பாவ சீமாட்டி, அவள் பெயர் அசமுகி; ஆட்டுமுகத்தி (அசம் — ஆடு).

'கோபமே மிகமிகு முனிவர்' துருவாசர். துருவாசர் கோபித்தால் அவர் தவம் அதிகரிக்கும். இது அவர் பெற்ற வரம். இப்படிப்பட்ட துருவாசரைத் துரத்திப் பிடித்து, வலிதிற் சேர்ந்து பெற்ற பிள்ளைகளே வில்லவன், வாதாவி. இவர்கள் முனிவர்களை உயிரோடு தின்று பசியைத் தணிப்பவர்கள்.

ஒரு சமயம் வனத்தில் ஒளித்திருந்த இந்திராணியை தமையனுக்கு அர்ப்பணிக்கும் பொருட்டு பிடித்திழுத்தாள் அசமுகி. அப்பொழுது இந்திராணிக்குப் பாதுகாப்பாயிருந்த வீரமாகாளர் — ஐயனுருக்குப் பணி செய்பவர் — அசமுகியின் கையைத் தறித்துவிட்டார். அசமுகி சூரபத்மனுக்கு முறையிட்டாள். அவன் பிரமாவை அழைத்தான். பிரமா ஒளித்தோடி விட்டார். உடனே அடுத்த அண்டத்துப் பிரமாவை அழைத்து அசமுகியின் கையைப் பழையபடி படைக்கும்படி கட்டளையிட்டான். இவ்வாறு இராச்சிய பரிபாலனம் நடைபெற்றது.

காடு போந்தனன் இந்திரன்; பொன்னகர் கரிந்து பாடு சேர்ந்தது; சயந்தனும் சிறையிடப்பட்டான், நாடில் விண்பதச் செய்கையீது.

இந்திரன் எப்படியோ தப்பியோடிக் காட்டிற் கரந்து தவமிருந்தான். அடிக்கடி கைலாசத்துக்கும் போனான். அங்கே கதவம் அடைபட்டிருந்தது; நந்திதேவர் எவரையும் பிரவேசிக்க அநுமதிக்கவில்லை.

இறைவன் கல்ஆல் நிழலில் நால்வர்க்கு ஒளிநெறி காட்டியவாறு யோக நிலையில் அமர்ந்திருந்தான்.

தேவி, இமாசல புத்திரியாய்த் தவமிருந்தாள்; இரங்காமலிருக்கமாட்டாமை அவள் இயற்கை. உயிர்களின் உய்தி நாடி உயிர்கள் தவமேற்கொண்டு, பரிபக்குவ நிலை யெய்தும் பொருட்டுச் செய்த செய்கின்ற செய்யும் தவம் அவள் தவம்.

# அத்வைத சிந்தனை — 9

## மாயை — 3

இறைவன் கைலாசத்தில் கல்லால் நிழலில் யோகநிலையில் இருக்கின்றான்; தேவி இமாசல புத்திரியாய் இமாசலத்தில் தவம் இருக்கின்றாள்.

நூற்றெட்டு யுகம் கழிந்தது. காலக் கழிவைச் சூரபன்மன் மறந்திருக்கலாம்.

நூற்றெட்டாம் யுக இறுதியில், பிரமதேவர்பால் ஒரு யோசனை உண்டானது. மன்மதன் எப்படியோ கைலையுட் புகுந்து இறைவனின் யோகநிலையைக் கலைக்க வேண்டுமென்பது அந்த அருமந்த யோசனை. மன்மதன் சிரித்தான்; மறுத்தான். பிரமா சபிப்பேனென்று எழுந்தார். பிரமாவின் சாபத்தால் அழிவதிலும், சிவனால் அழிவது மேல் என்று கருதி மன்மதன் கைலையை அடைந்து நந்தி தேவரைக் கண்டு நடுங்கினான். நூற்றெட்டு யுகம் அடைபட்டிருந்த கதவம் திறந்தது; நந்திதேவர் அநுமதித்தார். மன்மதன் உட்புகுந்து யோகத்திலிருந்த இறைவனை வணங்கி மிக்க அச்சத்துடன் புஷ்ப பாணங்களை அவர் மேல் தூவினான். நெற்றிக்கண் சற்றே திறந்து இமைத்தது. அவ்வளவே; மன்மதன் எரிந்து சாம்பர் ஆயினான். புகை மண்டலம் கைலாசத்தை மூடி எழுந்தது. மன்மதன் மனைவியாகிய இரதி கதறினாள்; பிரமாவும் இந்திரனும் தேவர் முனிவர் யாவரும் ஓலமிட்டழுதனர். இறைவன் கண்மூடி மௌனியாய்ச் சும்மா இருந்தான். யோகநிலை தொடர்ந்தது; மேலும் சிறிது காலம் கழிந்தது. இமாசல தவ விசேடத்தால் யோகநிலை நீங்கி இறைவன் போக மூர்த்தியாய்க் காட்சி அளித்தான். சாம்பரான மன்மதன் உயிர் பெற்றெழுந்தான்; இரதிக்கு அங்கனும் மற்றையோர்க்கு அநங்கனுயுங் காட்சி அளித்தான். போகமூர்த்தியின் கருணை இருந்தவாறு!

போகமூர்த்தியானதும், விவாகப் பேச்சு எழுந்தது. இமாசலத்தில் கோலாகலமாக சுவாமி திருக்கல்யாணம் நடந்தது. தவத்தர்கள் அனைவரும் அங்கே கூடினார்கள்; ஞானபாரம் அதிகரித்தது. அதனால் இறைவன் கட்டளைப்படி அகத்தியர் தென்திசைக்கு வந்து தமிழ் வளர்த்துத் தமிழ் முருகன் உதயம் செய்தற்கு வேண்டிய மருத்துவ பரிபாலனங் களைச் செய்யும் முகத்தால் வடதிசையோடு தென்திசை யைச் சமம் செய்து வைத்தார்.

"ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலக முய்ய". வீரவாகு முதலிய இலக்கத்தொன்பதின்மர் தம்பி மார் படைத்துணைவர் ஆயினர். பூத சைனியங்கள் இரண்டா யிரம் வெள்ளம். இறைவன் அநுக்கிரகத்தால் ஞான வேலை முருகன் கரத்தில் தாங்கினான். தேவர்களைச் சிறைவீடு செய்ய முருகன் யுத்த சந்நத்தன் ஆயினான்.

தாரகன் மாயாபுரியில் அரசு வீற்றிருப்பவன். அங்கே தான் எவரையும் மயக்க வல்ல கிரௌஞ்சமலை உள்ளது. முருகன் சேனைகள் மாயாபுரியில் பிரவேசித்த அக்கணமே, கிரௌஞ்சமலை யாவரையும் மயக்கிவிட்டது.

திருமுருகன் தாரகனுக்குக் காட்சியளிக்கின்றான்.

1. முழுமதியன்ன ஆறுமுகம்;
2. முந்நான்காகும் விழிகளில் அருள்;
3. வேல்; வேறுள படைகள்;
4. அழகிய கரமீராறு;
5. அணிமணித் தண்டையார்க்கும் செழுமலரடி;

என்னும் இவைகளைத் தாரகன் முடியிலிருந்து அடிவரை உற்று நோக்கினான். இந்தப் பாலொழுகும் குழந்தைக்கும், யுத்தத்துக்கும் வெகு தூரம் என எண்ணியிருப்பான். "முருகனைக் கண்டான்" என்றதும் கண்டவன் தானைத் தலைக்கணி செய்தாலோ என்று விம்மிதம் உறுகின்றார் கச்சியப்பர்.

''அவன் தவம் செப்பற் பாற்றே'' என்று தாரகன் தவத்தை வியக்கின்றார் கச்சியப்பர்.

தாரகனையும் கிரௌஞ்சத்தையும் ஞானவேல் சங்கரித்தது. சங்கரித்தல் என்பதற்குச் சுகஞ் செய்தல் என்ற பொருள் பொருத்தம். ஞானவேல் தீண்ட எத்துணைத் தவம் வேண்டும்.

இது நிற்க,

தாரகவதம் சூரபத்மன் வதியும் மகேந்திரத்துக்குக் கேட்டது. கவலையை அறியாத மனதிற் கவலை புகுந்தது. சூரபத்மன் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். அச் சந்தர்ப்பத்தில் அவனெதிரில், கோடி சூரியப் பிரகாசங் கொண்டதொரு சிம்மாசனம் உதயமானது. அதில் உதய சூரியன் போல ஒருவர் வீற்றிருந்தார். ஆச்சரியம் பரவியது! சூரபத்மன் பற்களைக் கறித்துக்கொண்டே ''கருப்பத்திலிருக்கும் அசுரக் குழந்தைகளே செய்தற்குரியதும் எளியதுமான இந்த மாயா சால வித்தையை என்னெதிரிலா துணிந்து செய்தாய்; நீ யாவன்''? என்று கறுவினான்.

''யான் திருமுருகன் தூதுவன்; வீரவாகு என் பெயர். தேவரைச் சிறைவீடு செய்தால் உன் வாழ்வு நீடிக்கும். இல்லையேல், தாரகனை வதம் செய்த வேலுண்டு'', என்று கூறி, அவன் கோபத்துக்குத் தூபமிட்டு அவ்விடம் விட்டு அகன்றார் திருமுருகன் தூதுவர். முருகன் அருளால் வந்த ஆசனமும் மறைந்தது. அதன் மேல் மந்திராலோசனை ஒன்று நடந்தது; யாவரும் யுத்தசந்நத்தர் ஆனார். மகாமேதையான சிங்கமுகன் எழுந்தான்.

''ஞானந்தா னுருவாகிய நாயகன் பெருமையை நீயும் நானுமா அறிய வல்லோம்'' என்று தொடங்கினான். அவனது அருமந்த போதனை புறக்கடித்து நீராயது. சிங்கன் பெருமூச்சு விட்டுக்கொண்டே கும்பகர்ணன் போலத் தமையன் பொருட்டு உயிர்விடத் தயாரானான்.

பானுகோபன் முதல் சிங்கன் பரியந்தம் யாவரும் இறந்து பட்டார்கள். சூரபன்மன் தனித்தான்; தாயை நினைத்தான். தாய் வழக்கம் போலின்றி 'விடிவா மளவும் விளக்கனைய மாயையாய்', சற்றே பராமுகத்துடன் சூரனை அணைந்தாள். இறந்தவர் யாவரையும் எழுப்பித்தரும்படி கேட்டான். அதனால், நீ நினைத்தபடி ஒன்றும் நடக்கப்போவதில்லை என்ற முறையில், காசிபரின் அருமந்த உபதேசத்தை நினைவு கூரத்தக்க வகையில் இறந்தவர்களை எழுப்பும் உபாயத்தைக் கூறிவிட்டு, சூரபத்மனின் அதிதீவிர பக்குவ நிலையில் தன் உபகாரம் முற்றுப்பெற்று மறைந்தாள் மாயை.

இந்திரமா ஞாலத் தேர் அமுத கீத மந்தர மலையைக் கொணர்ந்தது. தாரகன் தவிர யாவரும் உயிர்த்தெழுந்தனர். சூரபத்மனின் உவகை அண்டமுகட்டுக்கப்பாற் சென்றது. முருகன் புன்முறுவல் பூத்தான்; எழுந்தவர் அனைவரும் சாம்ப ராயினர். சூரபத்மன் புதையலைப் பெற்று இழந்தவன் நிலையை எய்தினன். அந் நிலையிலுங் கர்வந் தணியாமல் அநேக வடிவங்கள் எடுத்து எதிர்த்தான்; பயன் செய்யவில்லை. அவன் பக்குவநிலை கண்டு திருமுருகன் தன் திருப் பெரு வடிவத்தை ஓர் அளவுக்குக் காணச்செய்தான்; தரிசித்த அக்கணமே சூரபத்மன் பரவசமாயினன்; தன்னை இழந் தான் எனினும் மானத்தால் மனந் தடுமாறியது. பழைய நிலையை வருவித்தான் திருமுருகன். உடனே சூரபத்மன் அகங்கரித்தெழுந்து பல வேறு வடிவெடுத்து வீரவாகு முத லிய அனைவரையுங் கலக்கினன். இந்நிலை எஞ்சி நின்ற கர்மதோஷம் போலும். மலபரிபாக நிலையில் மாமர வடிவாய் நின்ற சூரபத்மன் மார்பில் ஞானவேல் பாய்ந்தது; பத்மன் சேவலாயினன்; சூரன் மயிலானன். ஈருயிர் ஒருமையுற்று ஒருடலில் வாழ்ந்தமை அறியத்தக்கது. சேவல், முருகன் புகழ் பாட மயில், முருகனைச் சுமக்கும் பாக்கியம் பெற்றது; எடுத்துச் சுமப்பானை எடுத்துச் சுமந்தது.

'அவன் தவம் செப்பற் பாற்றோ' என்று இளமுருகனைக் கண்ட தாரகனைப் புகழ்ந்த கச்சியப்பர் நிலை,

சூரபத்மன் திருப் பெரு வடிவத்தைக் கண்டபோதே 'மாயையின் மகனு மன்றோ வரம்பிலா வரம்பெற் றுய்ந்தான்' என்று வாயூறி விம்மிதமுற்று, 'சேவலும் மயிலும் போற்றி' என்று துதித்துச் சற்றே தணிவு பெற்றிருக்கும் போலும். சேவல், மயில், வேல் என்று நடுநாயகப்படுத்தியிருக்கின்றார் மயிலை. 'சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி!' என்பது கச்சியப்பரின் தோத்திரம்.

உயிரானது பிறவிப் பெருங்கடலைக் கடந்து தனக் குவமை இல்லாதான் தாளைச் சேர்ந்து மனக்கவலை நீங்கித், தாடலைப் படுதற்கு மாயை உபகரிப்பதை,

அஃதாவது,

உயிர் தன்னோடத்துவிதப்பட்டிருக்கும் உயிர்க்குயி ரோடு அத்துவிதப்படுதற்கு உபகாரமாதலைக் காண்க.

அறியாமை இருளிற் கிடக்கும் உயிர்க்கு, அறிவு விருத்திப்படுதலே, உய்திக்கு வழி; முத்திக்கு வித்து.

அறிவு விருத்திக்கு உயிர் அறிவு அருட்கிரணத்தோடு அத்துவிதப்பட்டே தீரவேண்டும். அவ்வாறு அத்துவிதப் படுதற்கு, மாயை என்ற சடசக்தியோடு இறைவன் அத்து விதப்பட்டு, மாயையில் அறுவகை அத்துவாக்களை முளை கொள்ளச் செய்கின்றான்.

இந்தச் சரீரம் உட்படப் பிரமாண்டமான இப் பிர பஞ்சம் நிலையாத வெறுந் தோற்றரவுகளே. இத்தோற்றரவு கள் நிலையாய உண்மைகளைக் காணுதற்கு — அணுகுதற்கு வழி. இறைவனின் அநுக்கிரகத்தோடு கூடிய மாயா விநோ தங்களின் விளக்கமே கந்தபுராணம்.

காசிபர் தொடக்கம் சுக்கிராசாரியார் பரியந்தம் அத்து வாக்களைப் பயன் செய்தவாறும் மாயையின் மாற்றமும் நினைவில் வைக்கவேண்டியவை.

# அத்வைத சிந்தனை — 9

## மாயை — 4

பஞ்ச கிருத்தியத்தில் முதல் மூன்று கிருத்தியமும் மாயையாகிய விளைநிலத்தில் நடப்பவை. மறைத்தல் எனப் படும் திரோபவம் நான்காவது கிருத்தியம்.

இந்த நான்கு கிருத்தியங்களையும் மனசில் இருத்து வோம்.

கேவலாவஸ்தைக்கும் சுத்தாவஸ்தைக்கும் இடையில் மிக மிக நீண்டதும் இன்றியமையாததுமானதொரு சேது பந்தனம் மாயை.

இறைவன் தன்னேடத்துவிதப்பட்டதும் அறுவகை அத்துவா வித்துக்கள் முளை கொள்வதற்கு விளைநிலமா யமைந்தது மாயை.

சகலாவஸ்தை மாயையாற் கிடைத்தது. சுத்தாவஸ் தைக்கு வழி செய்வது சகலாவஸ்தை.

சகலாவஸ்தை உள்ளழுக்கைப் போக்குமுகமாகப், பிறவிக் கடலை நல்கி, எண்பத்துநான்கு நூறுயிர யோனி பேதமூலம் உயிரைப் பக்குவப்படுத்தி, முத்தியாகிய சுத்தா வஸ்தைக் கரையை அணுகச் செய்வதாம்.

சகலாவஸ்தை பேணும் முறையிற் பேணற்பாலதாம்.

இறையொளியாகிய திருவருட்சக்தி, கேவலாவஸ்தையிற் குருடுபட்டுக் கிடந்த உயிரை, மாயையைப் பயன்படுத்திச் சகலாவஸ்தைப்படுத்தியது. அதனுல், விருத்திப்பட்ட உயி ரறிவுக்கு சுத்தாவஸ்தையாகிய முத்திக் கரைக்குச் செல்லும் வழி புலப்படுமாயினும், முத்தி யநுபவம் கைகூடுவது

மாயையின் உபகார மாத்திரையில் அமையாது. அதனால் மாயையை உபகரித்த அருட்சக்திதானே, திரோதான சக்தி யாய் மாறி, ஆணவம் முதலிய மலங்களை அதிட்டித்து, அவைகள் கிளர்ந்தெழுந்து அடங்கி வலி குன்ற வழிசெய்து, தன்னையும் மலங்களில் ஒன்றென்று எண்ண வைத்து, முகந்த வினைகளை ஊட்டும் முறையில் நல்வினையும் பொன் விலங்காதலை அறிய வைத்து, அவ்வாற்றால் இருவினை யொப்பு வருவித்து, மலபரிபாகம் பண்ணி, மலபந்த முற்ற உயிரை ஆணவத்தோடத்துவிதமானபடி, மெய்ஞ்ஞானத் தாணுவினோ டத்துவிதப்படுத்தும் என்க.

சினிமாத் திரையில் காட்சிகள் வந்து நின்று போவது போலும் மாயையில் பிரபஞ்சந் தோன்றி நின்றொடுங்குவது. இந்தத் தோற்றம், நிலை, ஒடுக்கமே இறைவனின் பஞ்ச கிருத்தியத்தில் முதல் மூன்று கிருத்தியம்.

சுவாமி சந்நிதியில் இடும் திரை போன்றது திரோதான சக்தியின் மறைப்பு. இத் திரை சுவாமியை மறைப்பது போலத் தோன்றினும் தரிசனத்துக்குக் காத்திருப்பவர் களின் உலக வியவகாரங்களை மறைத்து, அவைகளை மறக்கச் செய்து, சினிமாப் பாட்டுப் பாராயணம் செய்யும் வாயில் 'தலையே நீ வணங்காய்' வரச் செய்துவிடுகின்றது.

தீபாராதனைச் சமயத்தில் திரை விலகியதே தெரியாமல், ஒளிமயமான சுவாமி தரிசனங் கிடைக்கின்றது.

சுவாமி தரிசனம், திரோதான சக்தி பக்குவ நிலையில் அருட்சக்தியாய் மாறுவதை நினைவு கூர்விப்பதாம்.

மறைத்தல் பஞ்ச கிருத்தியத்தில் நான்காவதாம்; அது பக்குவப்படுத்துவதோர் அநுக்கிரகமாம்.

சினிமாத் திரைக்கும் சுவாமி சந்நிதானத் திரைக்கு முள்ள வேறுபாட்டில் வைத்து,

மாயையில் நிகழும் மூவகைக் கிருத்தியங்களுக்கும், மறைப்பு என்கின்ற திரோதான கிருத்தியத்துக்கும் வேறுபாடு தெளிக.

குதிரையின் இரு கடைக்கண்ணையும் மறைக்கும் மறைப்புப் போன்றது திரோதானம். குதிரையை நேர் வழியிற் செல்ல வைப்பது கடைக்கண் மறைப்பு.

நாம் எங்கிருந்து வந்தோம்? இனி எங்கே செல்வோம்? இப்பொழுதைய சுற்றத் தொடர்பின் இரகசியம் என்ன? ஒன்றும் தெரியவில்லையே! தெரியாமையாகிய மறைப்பு, நன்மைக்கே என்பதை அறிய முடியுமானால், திரோபவமும் அநுக்கிரக கிருத்தியம் என்பது புலமாம்.

இத் திரோதானமே அருளல் என்கின்ற ஐந்தாவது கிருத்தியத்துக்கு நேர்வழி செய்வது.

ஊன்றிய திருவடி ஆணவமாகிய முயலகன் வலியை அடக்கி, மறைத்தலாகிய திரோதான கிருத்தியம் செய்ய, எடுத்த திருவடி அருளற் கிருத்தியம் நடத்துவது காண்க.

மறைத்தற் கிருத்திய நலன்களைச் சிந்திக்க வைப்பது மாயை என்பதை மறத்தலாகாது.

இறையொளியாகிய சிவசக்தி பேதித்து நம்மை வளர்த்தெடுக்கும் பெய்வளை;

அவள் அநாதி கேவலத்தில் இருளாய்,

சகலத்தில் மாயை தந்த சரீர விளக்கில்

மங்கலான திரோதானமாய்,

சுத்தத்தில்

பரிசுத்த ஒளிவிளக்காய்க் காட்சியளிப்பாள்.

கேவலத்தில் புலப்படாமல், 'ஒளியும் மிக இருளே' என்றவாறு இருளாய் இருந்த சிவசக்தி, சகலத்தில் திரோதான சக்தியாய் ஓர் அளவு புலப்படவைப்பது மாயை.

மாயையின் இயல்புபற்றி,

'விந்துவின் மாயையாகி, மாயையின் அவ்வியக்தம் வந்திடும்' என்ற சித்தியாரும்

'மாயை ஒன்றே; அது ஊர்த்துவ மாயை, அதோ மாயை என இருவகைப்படும்' என்று அகோர சிவாசாரியர் கூறுவதும் சிந்திக்க வேண்டியவை.

விந்து—சுத்த மாயை. விந்துவில் மாயை என்றது அசுத்த மாயை. இது சுத்தாசுத்த மாயை எனவும்படும். இது அருளோடும் இருளோடும் சம்பந்தப்படுதலால் சுத்தமும் அசுத்தமுமாம்.

அவ்வியக்தம்—குணம் வெளிப்படாத நிலை. அந்நிலை பிரகிருதி எனப்படும்.

சுத்த மாயை பஞ்ச கலைகளையும் ஐந்து சிவதத்துவங்களையும் அடக்கியது.

அசுத்த மாயை கலைகளின் கீழ்ப்பட்டது; தத்துவமாக எண்ணப்படுவது. வித்தியாதத்துவம் ஏழனில் முதலாவது தத்துவம் அசுத்தமாயை. அது உயிரின் ஐந்து கவசங்களாகிய கோசங்களில் முதலாவது கவசம் ஆனந்தமய கோசம் எனப்படுவது. கோசம்—உறை; சரீரம்.

அசுத்தமாயையின் காரியமாகிய அவ்வியக்தம் எனப்படும் பிரகிருதி, ஆன்ம தத்துவ மூலம்; குணங்கள் வெளிப்படாத நிலை; குணதத்துவம் எனவும்படும்.

மாயை பற்றிச் சிந்திப்பதற்கு ஒரு அளவு விளக்கம் காட்டியவாறு.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 1

### இச்சை — I

" கன்மமும் மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும் " என்பது சித்தியார்.

மூலகன்மமாவது, இச்சை. மூலகன்மத்தோடு சம்பந்தப் படுதலின் 'கன்மம்' கான்மியம் எனப்பட்டது; காமியம் எனவும்படும். இவ்வளவும் சித்தியார் உரைக் குறிப்பு.

கன்மத்துக்கு மூலம் 'இச்சை' என்ற குறிப்பு, ஆழ்ந்து சிந்திக்கற்பாலது.

உயிர்களுக்கு அறியுந்தன்மை, இச்சிக்குந்தன்மை, செயல் செய்யுந்தன்மை உண்டு. அவை விருத்தியுறுதற்கு வியஞ்சகம் வேண்டும். வியஞ்சகம் வெளிப்படுத்துவது.

* * *

உயிர்களின் அறிவிச்சை செயல்களுக்கு வியஞ்சகம், இறைவனின் அறிவிச்சை செயல்கள்.

அறியாமை இருளில் முழுகிக் கிடக்கும் உயிர்களுக்கு இறைவனின் அறிவிச்சை செயல்கள் நேரே வியஞ்சகமாதலில்லை. பக்குவம் மிக்க பரிசுத்த உயிர்க்கே இறைவனின் அறிவிச்சை செயல்கள் நேரே வியஞ்சகமாம்.

இருளில் முழுகிக் கிடக்கும் உயிர்களுக்கு, மாயையாகிய சடசக்தி மூலம் வியஞ்சகமாம்.

இங்கே மாயை என்றது, இறைவன் மாயையோடு அத்து விதமாயவழி மாயையில் முளைகொண்ட கலை வித்தை அராகங்களை. அவை, இறைவனின் அறிவிச்சை செயல் என் னும் ஒளிக்கிரணங்கள், உயிர்களின் அறிவிச்சை செயல்களைத் தீண்டுதற்கு, அவற்றின் அறிவிச்சை செயல்கள் விருத்திப் படுதற்கு வாயில்கள்; வழிகள். அதனால் அவைகளே வியஞ் சகங்கள்.

மாயையாகிய விளைநிலத்தில் விளைவாகிய சத்தமும் அர்த்தமுமான அறுவகை அத்துவாக்களையும் நினைவுகூரு வோம். கலை, தத்துவம், புவனம் என்பன அர்த்த அத்துவாக் கள்; நடுவண் உள்ள அத்துவா, தத்துவம். இறைவன் தத்துவன்; அது, நீயாயிருப்பவன். தத் — அது; என்றது இறைவனை.

தத்துவம், தத்துவன் பெயராலமைந்திருப்பது சிந்திக்கத் தக்கது. உயிருக்கு உய்திகூடும் உயிர்நிலையம் 'தத்துவம்' போலும்.

தத்துவம் முப்பத்தாறு : சிவதத்துவம் ஐந்து; வித்தியா தத்துவம் ஏழு; ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு. மொத்தம் முப்பத்தாறு.

சிவதத்துவம் ஐந்து மடிப்புகளைக் கொண்டதாய் இறைவ னின் அருள்ஒளிப்பிழம்பைத் தணிக்கை செய்வது. தணிக்கை செய்த ஒளிக் கிரணத்தைத்தானும், தாங்குமாற்றல் உயிர்க் கின்மையின், மேலும் தணிக்கை செய்யும்முகமாய்ப், பஞ்ச கோசங்களாலாய இந்தச் சரீரம் அமைந்தது.

ஆனந்தமயம், விஞ்ஞானமயம், மனோமயம், பிராண மயம், அன்னமயம் என்பன பஞ்ச கோசங்கள். அன்னமய கோசம் வெளிப்புறச் சரீரம். கோசம் — உறை; கவசம் எனினுமாம்.

ஆனந்தமயகோசம், விஞ்ஞானமயகோசம் இரண்டும் வித்தியாதத்துவத்தில் அமைந்தவை.

ஆனந்தமயகோசம், சுத்தாசுத்தம் எனப்படும் அசுத்த மாயையாகிய தத்துவத்தால் அமைந்தது; இதுதான் உயிர் களின் முதலாவது உட்கவசம். அசுத்தமாயை, கலைகளின் கீழ்ப்பட்டுத் தத்துவமாயிருத்தல் நினைவில் வைக்கவேண்டியது. வித்தியாதத்துவத்திலமைந்த இரண்டாவது கோசம் விஞ்ஞான மயகோசம்.

ஏனைய கோசங்கள் ஆன்மதத்துவத்தில் உள்ளவை.

வித்தியாதத்துவம்: அசுத்தமாயை காலம் நியதி கலை வித்தை அராகம் புருஷன் என்கின்ற ஏழு தத்துவ அத்துவாக் கள் கொண்டது.

முதற்கோசம் அசுத்தமாயை என்பது மேலே சொல்லப் பட்டது. இரண்டாவது கோசம் விஞ்ஞானமய கோசம். இது வெகு முக்கியமானது. இது, காலம் நியதி கலை வித்தை அராகம் என ஐந்து மடிப்புக்கள் கொண்டது.

ஆனந்த விஞ்ஞானமய கோசங்களால் உயிருக்குப் புருஷத்துவம் உண்டாகின்றது.

விஞ்ஞானமய கோசத்தில் காலம் நியதி என்ற மடிப்புக்களை அடுத்துவரும் கலை வித்தை அராகம் என்னும் மூன்றனையும் எடுத்துக்கொள்வோம். மேலே இவற்றை வியஞ்சகம் என்றதையும் ஞாபகப்படுத்திக் கொள்ளுவோம்.

தணிக்கை செய்யப்பட்ட இறையொளியாகிய அருட் கிரணம், உயிரின் அறிவிச்சைசெயலோ டத்துவிதப்படுதற்கு, இரண்டாம் கவசமாகிய விஞ்ஞானமயகோசத்தை ஊடுருவும் இடமே, கலை வித்தை அராகம் என்பவை.

நிவிர்த்தி கலை யீறான பஞ்ச கலைகள் வேறு. இங்கே கூறும் கலை வேறு. இது, 'கலித்தல்' என்னும் பொருளுடைய தொரு தத்துவம். இக்கலை உயிரின் செயலை விருத்தி செய்யும் வியஞ்சகம்.

இருளிற் கிடக்கும் உயிர்க்கு முதலில் விருத்திப்படுவது செயல்; அடுத்தபடி வித்தை; பின், இச்சை விருத்தி யுறும்.

துயில்வோனைத் தட்டியெழுப்பி, சற்றே அறிவு வரச் செய்த பின்பே, அவன் தன் இச்சையை வெளிப்படுத்துவான். இது அருள்ஒளியைப் பெறும் உயிர்களின், செயல் அறிவு இச்சைகளின், விருத்திக் கிரமம். விருத்தி வளர்ச்சியுறும்போது, அறிவு இச்சை செயல் எனக் கிரமம் மாறும். இச்சை, நடுநாயகமாய் அறிவு செயல்களைப் பாதிக்கும்; செயலைப் பாதிக்கும் அளவிலமையாது, அதன் மூலமாயுமிருக்கும்.

'கன்மமும் மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்' என்பதை ஞாபகப்படுத்துவோம். இந்த இச்சையே ஆழ்ந்து சிந்திக்கற்பாலதென்று மேற்குறிப்பிடப்பட்டது.

பஞ்ச கோசங்களில் மூன்றுவது கோசம் மனோமயகோசம். இது ஆன்ம தத்துவத்தில் உள்ளது. இரண்டாவது கோசமான விஞ்ஞானமயகோசத்துக்கண்மையில் அடுத்து உள்ளது. விஞ்ஞானமயகோசத்தில் உள்ள இச்சை, வளர்ச்சிக் கிரமத்தில், மனோமயகோசத்தில் உள்ள மனத்தை எட்டும். மனம், 'இச்சை' சவாரிசெய்யும் குதிரை. இச்சை மனக் குதிரையில் ஏறிச் செய்யும் சவாரியின் வேகத்துக்கு, மின்னொளி வேகம் உறையிடவும் போதாது; கண் இமைக்குமுன், எத்தனையோ கோடி அண்டங்களைத் தாண்டிவிடும். அணுக்குண்டு வேகம் அதனை எட்டியும் பார்க்க முடியாது. ஒரு செக்கனில், எத்தனையோ பிறப்புக்கு அடிகோலிவிடும். சின்னஞ் சிறியதோர் இச்சை — ஓரணுவைப் பதினாயிரம் கூறிட்ட அளவினதாய இச்சை — மகாமேரு அளவினதாகிய துன்பத்தை — புலம்புதலை — உண்டாக்கிவிடும்.

ஒரு சமயம் நந்திகணத்தவர் ஆயிரவருக்குத் திருக்கைலாசத்தில் சிவஞானபோத பாடம் நடந்தது.

'யாவையும் சத்தெதிர் சூனியம்' என்பது சிவஞான போத சூத்திரம். யாவரும் கண்மூடி மௌனிகளாயினர். 'எனை நானென்பதறியேன், பகலிரவாவதும் அறியேன்' என்ற நிலை கைகூடியது; யாவரும், தம்மை இழந்து பரவசமாயினர்.

அச் சமயத்தில் தேவேந்திரன் இந்திரச் செல்வம் புடைசூழ ஐராவதத்தில், கைலாச தரிசனத்துக்கு வந்தான். ஆயிரவரில் ஒருவரின் கண், சற்றே விழித்து, இந்திரன் பவனியை நோக்கியது. நோக்கியது குற்றமன்று. நோக்கை அடுத்து, மனசில் சின்னஞ் சிறியதொரு இச்சை — பரமாணுவின் பதினுயிரங் கூற்றில், ஒரு கூற்றினும் சிறியதோரிச்சை, இந்திரச் செல்வத்தை ரசனை செய்தது. அந்த ரசனையைப் பிறப்பித்த இச்சை, மகாமேரு அளவினதாய குற்றமாயிற்று. பூமியிற் போய், பிறந்து அவ்விச்சை முளை முனையைக் களைய வேண்டிய நிலை நேர்ந்தது.

" இந்திரச் செல்வம் போல இயைந்துள இன்ப மெய்தி
மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாத வூரர்
தந்திரத் தொகுதி சூழத் தாரகா கணங்க ளோடும்
அந்தரத் திழிந்து மண்மே லமர்ந்தவெண் மதிய மொத்தார்"

என்பது திருவாதவூரடிகள் புராணம்.

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகரே, நந்திகணத்தவராயிருந்து பூமிக்கு வந்தவர்.

'குடமுழநந் தீசனைவா சகனுக் கொண்டார்' என்பது தேவாரம்.

வாசகன், மாணிக்கவாகர். இவர் கைலாசத்தில், நந்தி கணத்தில், ஒருவராய், குடமுழா முழக்கும் பணி செய்து கொண்டிருந்தவர். இவர் மணிவாசகராய், முதன் மந்திரியாய், வாசியிலேறி வாசி வாங்கச் சென்றதும், அந்த வாசி சென்ற வழி மாறி யொரு தெய்வ வழி சென்றதும், அது அவருக்கு நல்ல வாசியாய்த் திருப்பெருந்துறையில் ஆட்பட்டதும் அறிந்தவை. வாசி — குதிரை; அதிட்டமுமாம்.

திருப்பெருந்துறையில் திருக்கைலையிற்போல் நிட்டை கைகூடியதும், குருவாய் 999 சீடருடன் எழுந்தருளிய இறைவன், உயர் மலைகிழவோனுய்ச் சீடருடன் மறைந்ததும், நிட்டைப்பின் விழிப்பு நிலை கைகூடிக் குருவின் பிரிவை ஆற்ருது புலம்பியதும் புராணத்தில் அறிந்தவை.

பிரிவாற்றுது புலம்பிய புலம்பலே, உள்ளத்தை உருக்கும் திருவாசகமாயது.

உலகத்தைப் பொறுத்தவரையில், உலகம் திருவாசகப் பேறு பெற்றது.

திருவாசகம் அன்பினைந்திணையில் நெய்தல். நெய்தலாவது இரங்கல்; புலம்பலுமாம். அதற்கு நிலம் கடற்கரை. ஆன்மாவாகிய தலைவி, மீன் உணக்கிக்கொண்டிருப்பவள். தன் புலால் நாற்றம், தலைவர் தன்னை அடைதற்குத் தடையாயிருக்கின்றதே; "இந்தப் புலால் நாற்றத்தை அந்த மகா புனிதர் சகிப்ப தெங்ஙனம்? அருவருப்பாரே" என்று, அழுது அழுது தன் கண்ணீரால் தன்னைக் கழுவிக்கொண்டேயிருப்பாள்.

அவ்வாருகிய நிலையிற் கண்களிற் பெருகிய கண்ணீரே, நெய்தலாகிய திருவாசகம்.

திருவாசகக் கண்ணீர் சுத்தம் செய்ததும், பொன்னம்பலத்தில் தாடலைப்பட்டு, அத்துவிதமுத்தி சித்தித்ததும் புராணத்திற் கண்டவை.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 2

### இச்சை — II

உயிர்களின் அறிவிச்சை செயல்கள் விருத்தியுற்று வளர்தற்கு இறைவனின் அறிவிச்சை செயல்களின் தொடர்பு வேண்டும். தொடர்பாவது இறைவனின் அறிவிச்சை செயல்கள், உயிர்களின் அறிவிச்சை செயல்களோடு அத்துவிதப்படுதலாம். அவ்வாறு அத்துவிதப்படுதற்கு உபகாரங்கள் கலை வித்தை அராகம் என்னும் தத்துவ அத்துவாக்கள். அதனால் அவைகள் வியஞ்சகங்கள் எனப்படும். [வியஞ்சகம்–வெளிப்படுத்துவது.] உயிர்களின் அறிவிச்சை செயல்களை இறைவனின் அறிவிச்சை செயல்களோடு தொடர்பு படுத்தி, அவ்வாற்றால் வெளிப்படுத்துபவை என்றவாறு.

இச்சை கன்ம மூலம். அது மனக் குதிரையில் இவரும் போது அதன் வேகத்தைத் தடுத்தலரிது. இம்மியளவு இச்சை மேரு அளவு தவறுதலை வருவித்து விடும்.

இதற்கு ஓர் உதாரணம், குடமுழ நந்தீசர் மாணிக்க வாசகரானது.

இத்துணையும் முந்திய பேச்சின் சுருக்கம்.

மாணிக்கவாசகரை அடுத்து மற்றொருவர் நல்ல உதாரணம் சுந்தரர். இவரும் குடமுழ நந்தீசர் போலத் திருக்கைலாச வாசி. அங்கே இவர் பெயர் ஆலாலசுந்தரர்; பிரமவிஷ்ணுக்களை ஓடச் செய்த ஆலகால விஷத்தைக் கையாலெடுத்து அங்கையில் அடக்கிக் கொணர்ந்து சிவபெருமானிடம் நிவேதித்து சிவபெருமானைத் திருநீலகண்டர் ஆக்கியவர்.

கைலையில் இரு பெண்கள் அம்மைக்குப் புஷ்பம் எடுத்தல் முதலிய பணி செய்துகொண்டிருந்தவர்கள். ஒரு நாள் தெய்வ சங்கற்பமோ என்னவோ சுந்தரர் அவர்களை மோகிக்க அவர்கள் மனமும் சுந்தரரை மோகித்தது. தினைப்பிரமாண மோகமே யாயினும் மூவரும் பூமிக்கு வரவேண்டியவர் ஆயினர். பெண்கள் பெயர் பரவையார், சங்கிலியார்.

நமக்குப் 'பித்தா பிறை சூடி' வாய்த்தது. திருத் தொண்டத்தொகை கிடைத்தது; பெரியபுராணம் உதித்தது.

சுந்தரர் பரவையாரை மணந்தார்; சங்கிலியாற் கட்டுண் டார்; கண்களை இழந்தார்; இறைவனைத் திட்டிக்கொண்டே இறைவன் திருவடிகளை இறுகப் பற்றிக்கொண்டார். இரு வருடத்தில் மோகம் சூனியமாயது. பதினெட்டாம் வயசில் வெள்ளை யானையி லிவர்ந்து கைலை சென்று கைலாசவாசி யாயினர். பெண்களும் பழைய நிலை எய்தி, அம்மை பணியைத் தொடர்ந்தனர்.

இச்சையின் சரித்திரம் இருந்தவாறு!

மணிவாசகரின் இச்சை இந்திரச் செல்வத்தை மதித்தது. சுந்தரரின் இச்சை பெண்களைப் பற்றியது. அப்படியிருந்தும் இறுக்கமான பிடி, நெருக்கமான தோழமை, அதி தீவிர பக்குவத்தை வருவித்துவிட்டன.

கண்ணப்பர் கண்ணை இடந்தார்; சுந்தரர் கண்ணை இழந் தார். கடவுட்பிடி இருந்தவாறு! இச்சையின் சரித்திரமே உலக சரித்திரம். அது மேல் கீழ் உலகங்களையே ஆட்படுத்தி விடும். வெகு வெகு நீளமானது. அதன் சரித்திரத்தை இவ் வளவில் நிறுத்தி இச்சையின் விளைநிலமாகிய கன்மத்துக்கு வருவோம். அதன் காரியப்பாடு இருவினைகளாகிய இரட்டைப் பிள்ளைகள்; தாய்க்கு அரிட்டம் வருவிக்கும் பிள்ளைகள், இந்தப் பிள்ளைகளின் தாய் யார்? தாய்க்கு இப் பிள்ளைகளால் வரும் அரிட்டம் யாது? என்ற வினுக்கள் எழலாம்.

தாய் யார் என்ற முதலாம் வினாவை எடுத்துக்கொள்ளு வோம்.

''இருள் சேர் இருவினை'' என்பதனால் தாயை இன்னார் என்று புலப்படுத்துகின்றார் வள்ளுவர். இரு பிள்ளைகளுக்கும் தாய் ''இருள்'' என்கின்றார். இருள் — அறியாமையாகிய ஆணவ இருள்.

உபகரிக்க வந்த மாயை அருளோடும் இருளோடும் தொடர்புபடுதலால் செயல் எனப்படுங் கன்மத்தின் மூலமான இச்சை கன்ம வித்தை முளைகொள்ளச்செய்து, இரு வினைகளாய் விருத்தியுற வைத்து விடுகின்றது. அருளின் தொடர்பால் நல்வினையும் இருளின் தொடர்பால் தீவினையும் விளைகின்றன. இந்த நல்வினையும் ஒரு காலத்தில் விடப்படவேண்டிய தாதலின் இருளாகிய தாய்வழிச் சொத்தாயிற்று. இருள்சேர் இருவினை என்பதனை ஞாபகஞ் செய்வதோடு விடிவாமளவும் விளக்கனைய மாயை என்பதனையும் நினைவு கூருவோம். ஆணவ இருளிற் கிடைக்கும் அருளொளி இரவிற் கிடைக்கும் விளக் கொளி போல்வதாம்.

கன்ம மூலமான இச்சை, கன்மத்தை முளைகொள்ளச் செய்ய, அக் கன்மம் இருவினைகளாய்ப் பெருகியது பற்றியும், வினைகள் இருள்சேர் இருவினைகளாதல் பற்றியும் சிந்தித் தோம்.

இனி இருளாகிய தாய்க்கு இருவினைகளாகிய இரட்டைப் பிள்ளைகள் அரிட்டம் வருவிப்பது பற்றிச் சிந்திப்போம். அரிட்டம் — கேடு.

'பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை' என்பது மணிவாசகம். பெய்வளை—சிவசக்தி. திருவருளாகிய சிவசக்தி, சடசக்தியாகிய மாயை மூலம் இருண்மலத்தைக் கலக்கி வெளி யேறச் செய்யும். மலத்தின் வெளியேற்றமே கன்மப் பிரவா கம். கன்ம மூலம் இச்சை. இச்சையின் காரியப்பாடே கன்மப் பிரவாகம். கன்மப் பிரவாகந்தானே இருவினைகளாகிய இரட்

டைகள். இருவினைக்குப் பயன் பிறவி. உயிர்கள் இருவினை காரணமாகப் பிறவிக் கடலில் உழலும். இருவினைகளைப் பிறவி தோறும் அநுபவிக்க அநுபவிக்க ஆணவம் வலி குன்றும். இருண்மல வெளியேற்றமே கன்மப் பிரவாகம் என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுவோம்.

தீவினையே செய்யும் உயிர்களும், ஒரு காலத்தில் நல்வினை செய்து உயர்ச்சியுற விரும்பும். இந்திரச் செல்வங்களில் இச்சை அதிகரிக்கும். மற்றொரு காலத்தில் 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்ற நிலை நேரும். அந் நிலையில் நல்வினையும் பொன் விலங்கே என்ற எண்ணம் உண் டாகும். அக்கணமே இருவினை ஒப்புப் பிறக்கும். அந்நிலை யில் இருவினைகளை ஈன்றெடுத்த மலம் வலி குன்றி மெலிந்து வறுத்த வித்தாய்விடும். இந்நிலை மலபரிபாகம் எனப்படும். இந்நிலையில் சிவசக்தியாகிய அருள்ஒளி மேலிடும். ஒளி மேலிடு தல் சத்திநிபாதம் எனப்படும். சத்திநிபாதம் — திருவரு ளாகிய சக்தி பதிதல். சத்திநிபாதம் எய்திய உயிர் ஆண வத்தோ டத்துவிதமானபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவிதப்படும்.

கேவலாவஸ்தையில் ஆணவ இருளோடு எவ்வாறு அத்து விதப்பட்டிருந்ததோ, அவ்வாறு ஒளி மேலிட்டுச் சுத்தாவஸ்தை எய்தி, அருள் ஒளிப் பிழம்போடு அத்துவிதப்படும் என்றவாறு.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 3

### பிராரத்தம்

இச்சையின் விளைவாய கன்மப் பிரவாகம், ஆணவக் கழிவாய், இருவினையாய் உயிரைப் பிறவிக் கடலில் ஆழ்த்துவது பற்றியும், இருவினை யொப்பில் பெறும் பேறு பற்றியும் முன் சிந்தித்தோம்.

இருவினை பற்றி மேலும் சிந்திப்போம். இருவினையும் விடற்பாலன என்பதையும் நினைவு கூருவோம். விடற்பாலனவாய இருவினைகள் பற்றி எழுந்த நூல்களுக்கு அளவில்லை. சமஸ்த சாத்திரங்களும் இருவினைகள் பற்றியன என்றே கூறலாம். வினைகள் பக்குவப்பட்டு ஒப்புப் பிறத்தல் எளிதன்று.

தீவினைகளின் கொடுமைகளைக் காட்டி நல்வினையில் நெறிப்படுத்தலே நூல்களின் முக்கிய நோக்கம். நல்வினையில் நெறிப்பட்ட உயிர்க்கே ஒரு காலத்தில் இருவினை ஒப்புப் பிறக்கும்.

இனி இப்பொழுதைய வினையநுபவ விளைவுகளை எடுத்துக் கொள்ளுவோம்.

எடுத்த பிறப்பில் அநுபவிக்கும் இருவினை அநுபவங்கள் பிராரத்தம் எனப்படும். காலம் நியதி என்ற தத்துவங்கள், எடுத்த பிறப்பின் கால எல்லையையும் வாழ்க்கைப் போக்கையும் அறிவிப்பவைகள். பிராரத்தத்துக்கு ஒரு குழந்தை உண்டு. குழந்தைக்குப் பெயர் ஆகாமியம்.

பிராரத்தத்தை அநுபவிக்கும்போது உண்டாகும் விருப்பு வெறுப்பே ஆகாமியம். அது சம்பாத்தியம். பிறப்புத் தோறும் சம்பாதித்த ஆகாமியத்தின் குவியலுக்குச் சஞ்சிதம் என்று பெயர்.

சஞ்சிதக் குவியல், மகாமேரு போன்றது. சஞ்சிதத்தி லிருந்தெடுத்த, பரமாணுப் பிரமாணமே அடுத்த பிறப்பைத் தந்து, பிராரத்த அநுபவமாய் வருவது.

எடுத்த பிறப்புக்கும் காலம் நியதி என்ற தத்துவங் களுக்கும் தொடர்பு மேலே காட்டப்பட்டது. காலம் நியதி என்ற தத்துவங்களில், காலத்தைச் சற்றே சிறப்புற நோக்கு வோம்.

ஒரு குழந்தை பிறக்கிறதென்று வைத்துக் கொள்ளுவோம். சிரசு உதயமாகும் நேரத்தை, கணப்பொழுதுந் தவறாமல் குறித்துக் கொள்ள முடியுமானால், குழந்தையின் வாழ்நா ளெல்லை வாழ்க்கை நியதி என்பவைகளை அறிந்துகொள்ள முடியும். நியதி தெய்வ நியதி; தலையெழுத்து.

வேதாங்கங்களில் வேத உண்மைகளைத் தெட்டத் தெளிய அறிவிக்கும் அங்கம் சோதிடம். அது முக்கால நிகழ்வுகளையும் அறிவிக்கும்.

ஒரு கதை: சுவாமி விவேகானந்தர், மிக்க திறமை படைத்த சோதிடர் ஒருவரைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவ ரைச் சந்தித்தார். சோதிடர், சுவாமிகளின் திருவடிகள் தம் கண்ணுக்கு உதயமான நேரத்தைத் தம் மனசிற் குறிப்பிட்டி ருப்பார்போலும். சுவாமிகளை ஆசனத்திலிருத்தி, உபசாரங்கள் செய்தார். சுவாமிகளுக்குச் சோதிடரைச் சற்றே பரீட்சித்துச் சோதிட நுட்பத்தை அறியும் விருப்பம் மனசில் அரும்பி யிருக்கலாம். சுகக்ஷேமங்கள் வினவிய பின் சம்பாஷணை ஆரம்பமாயது. ஆரம்பிக்கும்போது சோதிடர் மிக்க பணி வுடன் ஒரு சிறு காகிதத்தில் ஏதோ எழுதித் தபாலுறையுள் வைத்து, அதனைச் சுவாமிகளின் திருக்கரத்தில் கொடுத்து,

சட்டைப் பையுள் வைத்துக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டார். சுவாமிகள் அவ்வாறே செய்தார். சம்பாஷணை தொடர்ந்தது. சம்பாஷணை நடந்துகொண்டிருக்கும்போது முக்கியமான ஒரு நேரத்தில், சுவாமிகளை நோக்கி ஏதாவது நினைக்கும்படி சோதிடர் கேட்டுக்கொண்டார். சுவாமிகள் உபநிடதத்தில் பயின்று வழங்காததொரு தொடரை நினைவு கூர்ந்தார். நினைத்த பின், காகிதத்தை எடுத்துப் பார்க்கும்படி கேட்டுக் கொண்டார். பார்த்தபோது, தாம் நினைத்த உபநிடதத் தொடர், முன்னமே எழுதியிருப்பதைக் கண்டார். சுவாமிகள் நினைத்த நிமிஷத்துக்கு எத்தனையோ நிமிஷத்துக்கு முன் இன்ன நேரத்தில் இன்ன தொடர் சுவாமிகளின் நினைவுக்கு வருமென்பதைச் சோதிட மூலம் சோதிட நிபுணர் அறிந்ததையிட்டுச் சுவாமிகளுக்கு உண்டான ஆச்சரியத்துக்கும், சோதிடத்தில் வைத்த மதிப்புக்கும் எல்லையே இல்லை.

ஒரு இடத்தில் மூன்று ஆசனங்களில் மூவர் இருக்கின்ருர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். மூவரில் இருவரிருப்பைப் பட மூலம் வரைந்து கொடுத்தால் மூன்ரும் ஆசனத்தில் ஒருவர் இருந்தே தீரவேண்டுமென்பதைச் சோதிட நிபுணர்களால் தெரிவிக்க முடியும்.

ஒரு குடும்பத்தில் ஒருவரின் சாதகத்தை எடுத்துக் கொண்டு மற்றவர்களின் நிலைமைகளைச் சொல்ல முடியும்.

சனத் தலைவர்களை எடுத்துக்கொண்டால் சனங்களின் வினைகளுக்குத் தக்கவாறுதான் சனத் தலைவர்களின் புத்தி தொழிற்படு மென்பதைச் சோதிட மூலம் சொல்ல முடியும்.

> முந்தொரு காலத்தில் மூவுல கந்தன்னில்
> வந்திடும் உயிர்செய்த வல்வினை அதனுலே
> அந்தமில் மறையெல்லாம் அடிதலை தடுமாறிச்
> சிந்திட முனிவோரும் தேவரும் மருளுற்ருர்.

என்று தொடங்குகிறது கந்தபுராண பாயிரம்.

உயிர்களின் வினை, அந்த உயிர்களோடு தொடர்புபட்ட தேவர்களையும் முனிவர்களையும் மயக்கிவிட்டது.

தக்கன் பிரசாபதி; பிரமாவின் புதல்வன்; பிரசைகளுக்குத் தலைவன். பிரசைகளின் வினையால், அவன்பால் மயக்கம் உண்டாயது. இறைவனுக்கு எதிராக வேள்வி செய்தான். அதில் பிரம விஷ்ணுக்கள் கூடப் பங்கு பற்றினார்கள். வந்தான் சூரபன்மன்; நூற்றெட்டு யுகம் தேவர்கள் பட்ட பாடுதான் க்ந்த புராணம்.

'ஒன்றை நினைக்கின் அது வொழிந்திட் டொன்றாகும்.'

நினைப்பு மறப்பு உயிரின் அறிவாற்றலில் அமையாமல் நடந்துகொண்டிருக்கும்.

நினைவு மாற்றம்,

'எனையாளு மீசன் செயல்' என்கின்றார் ஔவையார். ஈசன் செயலை நடத்தும் பணியாளர் கிரகங்கள்.

சுவாமி விவேகானந்தர் இன்ன நேரத்தில் இன்னதை நினைப்பார் என்று சோதிட மேதை ஒருவர் குறிப்பிட்டது மேற்காட்டப்பட்டது.

அகக்கரண புறக்கரணங்களை நடத்தும் பணியாளரும் கிரகங்களே. கரணங்களுள் முக்கியமானது மனம். அது உயிரறிவுக்கு அடங்காது.

'இந்திரியம் எனைப்பற்றி ஈர்ப்பது தந்தவன்றன் ஆணை' என்கின்றது சித்தியார். தந்தவன், மனம் முதலிய தத்துவங்களைத் தந்த தத்துவனாகிய இறைவன். அவன் ஆணையை நடத்துபவை கிரகங்கள்.

கிரகங்களை எவ்வளவு பிரார்த்தித்தாலும் அவை இறைவன் ஆணையையே நடத்திக்கொண்டிருக்கும். ஆணையை நடத்துவதாவது பிராரத்தத்தைக் கால நியதிக்கமையப் புசிப்பித்தலாம்.

மாயையாற் கலக்குண்ட ஆணவக் கழிவே கன்மப் பிரவாகம். அந்தப் பிரவாகமே இருவினையாய்த் துன்ப இன்ப அநுபவங்களைத் தரும் பிராரத்தம் என்பதை மீண்டும் நினைவு கூருவோம்.

இவன் பிராரத்தத்தை ஆகாமியம் ஏறுமற் புசிப்பான்; இன்னுன் ஆகாமியம் ஏறுமற் புசிக்க மாட்டான் என்பதும், பிறந்த கால நேர நுட்ப மூலம், சோதிடம் நிச்சயம் செய்யும்.

பிராரத்த அநுபவம் பேசும் சோதிட நுட்பம் இருந்தவாறு!

பிராரத்த அநுபவங்களை ஊட்டுபவை கிரகங்கள்; அவை இறைவன் ஆணைவழி நிற்பவைகள்.

இன்ன நேரத்தில் இன்னுருக்கு இவ்வாறு நினைவு மாறும்; சுற்றம் சுற்றுடல் இவ்வாறு அமையும்;

சனத் தலைவனின் புத்தி சனங்களின் வினைக்குத் தக்கவாறு அமையும்;

தக்கன் பிரசாபதி; ஒரு காலத்தில் பிரசைகளின் வினையால் அவன் புத்தி தடுமாறியது,

என்றின்னேரன்ன விபரங்கள் பிராரத்த அநுபவம் பேசும் சோதிட நுட்ப விளக்கங்கள்.

சம்பந்தப்பிள்ளையார் இறைவனைப் பற்றி நின்றமையால் இறைவன் ஆணைவழி நின்ற கிரகங்கள், பிள்ளையாரின்

ஆணைவழி நின்றன.

'வேயுறு தோளி பங்கன்' என்று தொடங்கும் பதிகம், ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி பாம்பு இரண்டும் பிள்ளையார் வழி நின்றமையைக் காட்டுவது.

நாமெல்லாம் சம்பந்தராதல் இயலாது. இயன்ற அளவு ஆகாமியம் ஏறாமல், பிராரத்தத்தைப் புசிக்க முயல்வோமாக.

பிராரத்தத்தை ஆகாமியம் ஏறாது, புசிக்க முடியுமானால் இருவினை யொப்புப் பிறந்து ஆணவம் வலி குன்ற சத்தி நிபாதம் கைகூடும். அது, கைகூட, உயிர் இறையோடு அத்துவிதப்படும். அது சுத்தாத்துவித முத்தியாம். 'சுத்தம்' என்றது, கேவல சகல சுத்தம் என்பதில் சுத்தத்தை; அஃதாவது சுத்தாவஸ்தையை.

இதுகாறும் வினைகளுள் பிராரத்தம் பற்றி வேதாங்கமான சோதிடத்தை முன்னிட்டுச் சிந்தித்தோம். இனிப் பிராரத்த அநுபவத்திற் பிறக்கும் ஆகாமியம் பற்றிச் சிந்திப்போம்.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 4

### ஆகாமியம் — I

பிராரத்தத்தின் குழந்தை ஆகாமியம் என முன் சொல்லப்பட்டது.

'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.'

இன்பக் காலத்தில் இன்பத்தில் விருப்பம் வையாமல் லபித்திருக்கிறது என்ற அளவில் — இன்பத்தை அநுபவித்தல் மாத்திரையில் அமைபவன், அவ்வாறே துன்பக் காலத்தில் துன்பத்தில் வெறுப்பின்றி அநுபவிப்பன். அப்படிப்பட்டவன் 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்ற பொன்மொழியைப் பேணி, நன்மை தீமைகளுக்கு — இன்பத்துன்பங்களுக்கு — தானே கருத்தா என்பதில் ஸ்திரம் அடைந்து, இன்ப துன்ப வாயில்களை உவத்தல் பகைத்தல் இன்றி இருப்பன்; ஆகாமியம் ஏருமல் தன்னைப் பாதுகாப்பன் என்றவாறு.

ஆகாமியம் ஏருது பிராரத்தத்தை நுகர வேண்டுமென்று சொல்லளவிற் சொல்லுவது எளிது; செயலளவில் அந்நிலை சித்திப்பது அரிதினும் அரிது.

கைலாச வாசிகள் இருவர், இறைவழி நின்றவர்கள், இம்மியளவு—பரமாணுப் பிரமாணம்—இச்சை அரும்பியதால் பூமிக்கு வந்த சம்பவம் முந்திய பேச்சில் காட்டப்பட்டது. இருவரில் ஒருவர் மாணிக்கவாசகர், மற்றவர் சுந்தரர். வேருெருவர் கைலாசகிரிச் சாரலில் தவமிருந்தவர்; ஒரு சமயம் நலிவுற்று வருந்திய ஒருவனுக்கு இரங்கியவர்; இரக்கங்

கூட ஆகாமியமாய்ப் பூமிக்கு இறங்கச் செய்தது. இச்சைக்குக் கிடைத்த தண்டனையிற் கூடிய மகா தண்டனைக்கு ஆளாக்கிவிட்டது. அந்த மகா குற்றவாளியே திருநாவுக்கரசர். முற்பிறப்பு நாமம் வாகீசர். வாகீச முனிவர் கைலாசகிரிச் சாரலில் தவஞ் செய்துகொண்டிருக்கும்போது ஒரு தினம் கைலாசம் அசைந்தது. ஓ! என்ற அழுகுரல் எழுந்தது. கைலாசத்தைப் பெயர்க்க முயன்ற இராவணன் கைலேக்குக் கீழ் நெரியுண்டு இறைவன் பாத விரல் நுதியால் தாக்குண்டு பத்து வாயையும் பிளந்து அலறினன்.

வாகீசர் தவம் குலேந்தது; எழுந்து சென்று இராவணன் நிலேயை நோக்கினர். சர்வசீவ தயாபரன் தண்டிக்கிருர் என்பதைஅறிந்தும், ஆகாமியம் 'இரக்கம்' என்ற ரூபத்தில் வாகீசர்பால் எழுந்தது; இராவண சீவனுக்கு வைத்தியம் செய்யத் தொடங்கினர் வாகீசர். 'ஏ! இராவணு! நீ சாமவேதம் வல்லவன்; இசையுடன் இறைவனே நினைந்து பாடு' என்று புத்திமதி புகட்டினர். இராவணன் ஒரு தலேயையும் அதனேடு கூடிய எலும்பு நரம்புகளேயும் எடுத்து வீணை செய்து, பக்க வாத்திய சகிதம் சாமவேத கீதம் பாடினன். கைலாசம் உருகியது. இரங்காமலிருக்க மாட்டாதவன் இரக்க வெள்ளமாயினன் ; இராவணனே எடுத்து அவனுக்குப் பெரு வரங்கள் கொடுத்தருளினன் இறைவன்.

இராவணன் வாகீசருக்கு நன்றி கூறக்கூட மறந்து, தப்பிப் பிழைத்துக் கைந்நிறைந்த வரங்களுடன் இலங்கை சேர்ந்தான்; சாம வேத கீத கானம் உய்யச் செய்தது.

புத்தி சொன்ன — இரங்கிய — வாகீசரை இறைவன் அழைத்தான் ; வாகீசர்பால் நடுக்கம் குடிகொண்டது. 'வாகீசனே! நீ என்னிலும் இரக்கமுடையனுயிருக்கிருய் ; பூமிக்குப் போய் இரக்கக் கூட்டத்திற் சேர்ந்து இரங்கி வா' என்றருளினன்.

சம்பந்தர் "சமண்சித்தரை அழிக்கத் திருவுள்ளமே" என்று ஆலவாய்ப் பெருமானிடம் உத்தரவு பெற்றவர்.

வாகீசர், இராவணனே நெரிப்பவர் சர்வசீவ தயாபரன் என்பதை அறிந்திருந்தும் அத் தண்டனே அவன் நன்மைக்கே

என்பதனைச் சிந்தித்து, தம் நிலையை இறைவனிடம் நிவேதித்து, இறைவன் கருத்தின் வழி நடக்க வேண்டியவர் அவ்வாறு செய்யாதது சந்நிதி விரோதமாயிற்று. 'அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம் வீண் செயல்' என்கின்றது சித்தியார். வாகீசர் செயல் வீண் செயலாய் இச் சித்தவர்களின் குற்றத்திலும் பாரிய குற்றமாயிற்று.

பூமியில் திலகவதியாருக்குத் தம்பியாய் மருணீக்கியார் என்ற பெயருடையவர் ஆயினர்; திருநாவுக்கரசர் என்ற பெயர் மருள் நீங்கிய பின் வந்தது.

மருணீக்கியாருக்குச் சமண சமயத்தில் ஒரு 'மருள்' உண்டானது. இரக்கம் மிக்க சமயம் சமணம் என்ற எண்ணம் உண்டானது. தருமசேனர் என்ற பெயர் தரித்துச் சமணத் துறவியாயினர் வாகீசராகிய மருணீக்கியார்.

சமண இரக்கம் பற்றியதொரு கதை பின்வருமாறு :—

சமண ஆதிக்கம் மிக்கதொரு காலத்தில் அரசனும் சமணனாயினன். சமண அரசு நடந்துகொண்டிருந்தது. இரக்கம் மிக்க அந்தக் காலத்திலே, யாரோ ஒரு துரோகி தலையிலிருந்த பேனை எடுத்து கைந் நகத்தால் நசித்துக் கொன்றதைக் கண்டார்கள் சமணர்கள். கண்டதும் அந்தப் பேனைக் கொன்ற துரோகியை அரசனிடம் ஒப்பித்தார்கள். உடனே சமணத் துறவிகளை அரசன் அழைத்து 'இந்தப் பேனைக் கொன்ற துரோகியை என்ன செய்ய வேண்டும்' என்று வினவினன். துறவிகள் 'இவனை ஊசியால் குத்திக் குத்திச் சித்திரவதை' செய்ய வேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள். அவ்வாறே அத் துரோகி சித்திரவதை செய்யப்பட்டான். இந்தக் கதை பச்சையான உண்மைக் கதைதான் என்பதை தருமசேனர் தமக்கையார் வழிநின்று திருநாவுக்கரசரான போது நடந்த சம்பவங்கள் உறுதி செய்யும்!

மதங் கொண்ட யானையை ஏவினார்கள்; சுண்ணாம்பறையி லிட்டுக் கதவை அடைத்தார்கள்; கல்லில் தோணி விடச் செய்தார்கள். சமண இரக்கம் இருந்தவாறு!

தருமசேனரைக் குடர் நோய் திருநாவுக்கரசராக்கியது. தேவி 'பேதித்து நம்மை வளர்த்தெடுக்கும் பெய்வளை'.

இறைவன் 'மறு சமயங்கள் மாளப் பேதகஞ் செய்பவன்'; மறு சமயங்கள், உண்மைச் சமயத்துக்கு மாறான சமயங்கள்.

பெண்களை இச்சித்த சுந்தரருக்கு பதினெட்டு வருட தண்டனை. இந்திரச் செல்வத்தை மதித்த மாணிக்கவாசகருக்கு முப்பத்திரண்டு வருட தண்டனை. பாவம்! அப்பருக்கு எண்பத்தொரு வருட தண்டனை. அப்பர் — திருநாவுக்கரசர்.

ஆகாமியத்தின் போக்கை என்ன என்பது! இது நிற்க, எங்கள் பாடென்ன?

கன்ம மூலமான இச்சை, மனக் குதிரையில் ஏறிச் சவாரி செய்கின்றது. 'ஆசைக்கோர் அளவில்லை' என்கின்றார் தாயுமானவர். 'சும்மா இருக்கின்ற திறம் அரிது' என்பதும் தாயுமானவர் வாக்கு.

இச்சை சும்மா கிடவாது. மனக் குதிரையில் கொலுவிருந்துகொண்டு ஒரு நிமிஷத்தில் எண்ணிறந்த பிறவிகளுக்கான ஆகாமிய வித்துக்களை முளை செய்துவிடும். எண்ணிறந்த பிறவிகளில் சம்பாதித்த ஆகாமியக் குவியலே 'சஞ்சிதம்' என மேற் கூறப்பட்டது.

பிராரத்தத்தை ஆகாமிய மேறாமற் புசிப்ப தெங்ஙனம்? சஞ்சித மேருவைத் தொலைப்ப தெவ்வாறு? 'பிறவிப் பெருங் கடல்' என்கின்றார் வள்ளுவர்.

அக் கடலைத் தாண்டி இருவினை யொப்புப் பிறந்து மல பரிபாகம், சத்திநிபாதம் என்ற படிகள் சித்திக்க வேண்டுவன என்பதை நினைக்க நடுக்கம் உண்டாகிறது. நடுங்கி ஆவதென்ன? முதலில் பிராரத்தத்தை ஆகாமியமேறாமல் புசிப்பது பற்றி யோசிப்போம். அவ்வாறு செய்து வெற்றி பெற்றவர் யாரு மிருந்தால் அவரைத் தேடிக் காண்போமாக!

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 5

## ஆகாமியம் — II

*('பிராரத்தத்தை ஆகாமியம் விளையாமல் புசித்து வெற்றி பெற்றவர் யாருமிருந்தால் அவரைத் தேடிக் காண்பேமாக.' என்ற வசனம் முதற் பேச்சின் இறுதி வசனம்.)*

'தேடிய பூண்டு காலில் தடக்குவதுண்டு' என்றொரு பழமொழியுண்டு. என்னைப் பொறுத்தவரையில் தேடாததொரு பூண்டு—ஆனால் தேவையானதொரு பூண்டு—தற்செயலாகச் சந்தித்ததுண்டு. 1923ஆம் ஆண்டு இச் சந்திப்பு நடந்தது. அப்போது பிராரத்தம் ஆகாமியம் என்ற பிரச்சினைகள் என்பாலில்லை. அவைகளைப் பற்றி அறிய வேண்டுமென்ற எண்ணமே கிடையாது.

சந்தித்த பூண்டு ஒரு தெய்வப் பிறவி; மனிதத் தெய்வம். அத் தெய்வம் ஆகாமிய மேறாமல், பிராரத்தத்தை அநுபவிக்க முயற்சிப்பதா யிருக்கலாம். அவ்வாறு அம் மனிதத் தெய்வம் இருப்பதால் யான் அடையக் கடவ பயன் எதுவும் அடையவில்லை. அப்படி நிலையைக் காணுங் கண் என்பாலிருக்கவில்லை.

அந்த மனிதத் தெய்வத்தின் தோற்றம் புதுமையானது. மிக்க குறுகிய அகத்தியத் தோற்றம்; தசைப் பற்றுக் குறைவு; என்பு தோல் போர்த்த உடம்பு; தலை முண்டிதம் போல் தோன்றும்; எண்ணத்தக்க சில மயிர்களாலான குடுமியுண்டு; நல்ல தேஜஸ் குறைவின்றி அணி செய்துகொண்டிருந்தது.

இது வேண்டும் அது வேண்டும் என்று அந்த மனிதத் தெய்வம் எதனையும் வேண்டுவதில்லை; தீண்டுவதில்லை. உள்ளது போதும் என்ற நிலை குடிகொண்டிருந்தது.

சூழல், அது தேவை இது தேவை என்று பறந்தடித்துக் கொண்டே இருந்தது.

ஏலாவாளி, உடம்பு இடங்கொடாது; அதனால் தம்மைப் போல் அந்த உருவம் பறந்தடிக்க முடியாமலிருக்கின்றது என்று தீர்மானித்திருக்கலாம் அந்தச் சூழல்.

இறைவனையும் அவனை யடையும் நெறிகளையுமே யன்றி பிறவற்றை — பந்தப்படுத்துவனவற்றை — தீண்டாதிருத்த லாகிய தீண்டாமைக் கோட்பாட்டை இறுகப் பற்றியிருக் கின்றது அந்த மனிதத் தெய்வம் என்பதைச் சூழல் அறியு மாற்றல் அற்றிருந்தது. அச் சூழலில் தாமரையிலையில் நீர் போல அது இருந்து வந்தது.

இச் சந்தர்ப்பத்தில் 'தீண்டாத கற்புடைய செழுந்திரு' என்று திரௌபதியைக் குறிப்பிடுவது சிந்திக்கத் தக்கது. ஐவரும் பதிகளாகவும், அவர்களுக் கூடாக அந்த ஒருவன் என்னும் ஒருவனையே பற்றி நின்றவள், அந்தத் தீண்டாத கற்புடைய செழுந்திரு.

'தீண்டாதாரே சைவர்'. அஃதாவது சிவசம்பந்தமுடையர் என ஒரு கட்டுரை 'ஆத்மஜோதி' யில் யான் வெளியிட்ட துண்டு.

தீண்டாமை கைவந்தவர்க்குத் தீண்டப்படாமை சித்திக்கும்.

துரியோதனன் திரௌபதியைத் தன் மடிமீதிருத்தும்படி தன் அருமைத் தம்பிக்கு உத்தரவிட்டான்; உத்தரவு நிறை வேறுமாயின், தம்பி தமையன் இருவரும் சாம்பராயிருப் பார்கள்.

இராவணன் சீதையைக் குடிசையோடு எடுத்தான். சீதையின் மனசு இராமனை யன்றி எவரையுந் தீண்டாதது; தீண்டப்படாமை சித்தித்திருந்தது. இராவணன் சிறைப்படுத்தியும் அணுக முடியாமல் நின்றொழிந்தான்; அணுகித் தீண்டினால் சாம்பராயிருப்பான்.

அகல்யை, மந்தோதரி, வியாழன் மனைவியாகிய தாரை, மூவரும், திரெளபதி, சீதை போலத் தீண்டாத கற்புடைய செழுந்திருக்கள். ஒருவன் என்னும் ஒருவனையே தீண்டுபவர்கள். இங்கே குறிப்பிட்ட ஐவர் பெண்களையும் பஞ்ச கன்னிகைகள் என்று கூறுவர். மந்தோதரி சீதையின் தாய். இவளை 'அழகமர் வண்டோதரி' என்கின்றது திருவாசகம்.

இறைவன் சடையிலிருந்த பெண் வண்டொன்று மந்தோதரியானதென்பது, நீண்ட வரலாறு. மந்தோதரி இறைவனை இச்சித்தமையால் கருப்பவதியாய், இராவணனை மணந்த பின், சீதையைப் பயந்தாள். அவளால் இராவணனுக்கு மரணம் என்று கூறினமையால், அவளை ஒரு பேழையுள் வைத்துக் கடலில் விட்டதும், அப் பேழையைச் சனகன் கண்டெடுத்ததும் நீண்ட கதை. இக் கதையை ஈழ மண்டல சதகம் விளக்கம் செய்திருக்கின்றது.

இது நிற்க, இத் தீண்டாமை தீண்டப்படாமை, மேற் குறிப்பிட்ட மனிதத் தெய்வத்திற் காணப்பட்டன. இப் பஞ்ச கன்னிகைகள் கதையை ஒரு சந்தர்ப்பத்தில் அந்த மனிதத் தெய்வமே கூறக் கேட்டதுண்டு. கேட்ட பின் — பல வருடம் கழிந்த பிறகுதான் அந்த இரு அம்சங்களாகிய தீண்டாமை தீண்டப்படாமைகளை பஞ்ச கன்னிகைகளின் கதை சொன்ன அந்த மகாத்மாவிடமே, மனமாரக் கண்டேன்.

'கண்டனன் கற்பினுக் கணியை' என்று அநுமான் இராமனுக்குக் கூறிய வாய்பாட்டில்,

'கண்டனன் அந்த இரு அம்சங்களும் அந்த மகானை அணிசெய்து கொண்டிருப்பதை' என்று வெகு தைரியத்துடன் சொல்லிவைக்க விரும்புகின்றேன்.

தீண்டாமை தீண்டப்படாமை சித்தித்த அந்த மகானின் ஆத்மீகப் போக்கை ஒரு சிறிது அறிந்தவர்கள் கைவிரல் மடித்து எண்ணத்தக்க சிலரினுஞ் சிலரேயாவர்.

சாமி காட்டுவதோ, சாமிப் பரிபாஷை பேசுவதோ, அந்த மகான்பால் இல்லாதவை.

அற்ப சொற்ப சித்திகளை வைத்துக்கொண்டு சாமி காட்டத் தொடங்கி எத்தனையோ சாமியார்கள் சீடர்களால் முழுச் சாமியார் ஆக்கப்பட்டு அல்லற்பட்ட கதை அதிகம்.

அந்த மகான் மனிதர் மத்தியில் சாதாரண மனிதராயே வாழ்ந்து வந்தார். தாமரை இலையில் நீர் போல வாழ்ந்தாலும் அது புலப்படாமலே வாழ்ந்து வந்தார்.

அவரை அறிந்த சிலரினுஞ் சிலர் அவர் பெயரை உச்சரிக்கக் கூசி அவருக்கு 'உப அதிபர்' என்று பெயரிட்டு வழங்கி வந்தார்கள்; மற்றையோரிலும் பெரும்பாலார் அப் பெயரையே தாமும் வழங்கி வந்தார்கள்.

'அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள், என்று ஒரு காதலி காதலன் பெயரைக் கூறக் கூசியது மனோன்மணியத்தில் சிவகாமி சரிதையில் வருவது ஞாபகத்துக்கு வருகின்றது.

உப அதிபர் என்ற பெயர் 1930இல் உண்டானது. அவ்வாண்டில் பட்டதாரியாய்ச் சைவாசிரிய கலாசாலையில் உப அதிபராயினர். அக் காலந்தொட்டு அவருக்கு வழங்கும் பெயர் 'உப அதிபர்'. அவருடைய திருநாமத்தை மிக்க கூச்சத்துடன் சொல்லி வைக்கிறேன். திரு. பொ. கைலாசபதி உப அதிபரின் திருநாமம். எனக்கு இரண்டாண்டு இளையவர் அவர்.

1923இல் பரமேசுவரக் கல்லூரி தொடங்கியபோது அங்கே மேல் வகுப்பில் படித்தவர் உப அதிபர்.

1923இல் தெய்வதப் பூண்டு ஒன்று தற்செயலாகச் சந்தித்தது என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுவோம்.

அந்தத் தெய்வதப் பூண்டுதான் பரமேசுவராவிற் படித்த உப அதிபர்.

அவருக்கு ஆகாமியம் ஏறுமல் பிராரத்தத்தைப் புசிப்பது மிக எளிதாயிருந்தது பற்றி இனி மேலே சிந்திப்போம்.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 6

### ஆகாமியம் — III

*1930இல் சைவாசிரிய கலாசாலையில் உப அதிபரான திரு. பொ. கைலாசபதி அவர்கள் விஞ்ஞான மேல் வகுப்பில் படித்துக்கொண்டிருக்கும்போது பரமேசுவராவுக்கு அண்மையில், சிவன் கோயிலுக்குத் தெற்கே அழகானதொரு ஈரப் பலாத் தோட்டத்தில் கல்விக் குழு ஒன்று முகாமிட்டுக் கொண்டது. அக் குழுவில் படிப்பவர்களும் படிப்பிப்பவர்களுமாக பல துறையில் விற்பன்னர்கள் இருந்தார்கள். பிரபலஸ்தர்கள் அடிக்கடி அங்கே பிரசந்நமாவார்கள்.*

*அந்த முகாமுக்கு உயிர்நாடியாயிருந்தவர் உப அதிபரோடு படிப்பிப்பவர்; அவர் உப அதிபரையும் அந்த முகாமில் சேர்த்துவிட்டார். அங்கேதான் உப அதிபரை முதன் முதற் கண்டு பழகினேன். அவர் போக்குப் பெரிதும் புறனடையான தென்பதை அறிந்துகொண்டேன்.*

*1930இல் ஒருங்கு வசிக்கும் பாக்கியம் கிடைத்தது. முன்னமே அங்கே நான் ஓர் ஆசிரியனாய் விட்டேன். கலாசாலையில் ஒரு சிறு குடிசையில் இருவரும் வசித்து வந்தோம்.*

*1934ஆம் ஆண்டுவரை இரவில் பெரும்பாலும் அவர் படுக்கையில் சயனிப்பது அரிதாயிருந்தது. கலாசாலைக்கு வடக்கே உள்ள பனை வெளிகளில் தனிமையாக உலாவி வெகு நேரங் கழித்துப் படுக்கைக்கு வருவார். சில வேளை தெற்கே கடற்கரைக்குச் சென்று அரியாலைவரை நடந்து விடிந்து வந்ததுமுண்டு. தாம் பகலில் வழங்கிய சொற்களில் பயனற்ற சொல் பிரயோகித்ததுண்டோ என்று சிந்திப்பவர் என்று கேள்விப்பட்டதுமுண்டு. என்ன நடத்துகிறீர்கள்*

என்று நான் கேட்டதேயில்லை. மிக்க மரியாதையோடு நடந்து கொண்டேன்.

1934ஆம் ஆண்டில் மனசை வெற்றிகொண்டார் என்று மேலும் வெகு காலத்தின் பிறகுதான் தெரிய வந்தது.

மனத்தை,

'சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு'.

என்பது தேவர் குறள்.

இச்சையைச் சுமந்துகொண்டு மின் வேகம் பிற்படச் சவாரி செய்த மனக்குதிரை அறிவின் வழி நின்றது.

ஆகாமியமேறுமற் பிராரத்தத்தை அநுபவிப்பது எளிதாயிற்று.

ஆகாமியத்தின் இடத்தில் தவம் வீற்றிருந்தது. அக் காலத்திலேதான் தீண்டாமை தீண்டப்படாமைகள் வெளிப் படப் புலமாயின.

மனம், அறிவு வழிப்பட்டவர்கள், மனக்கண் வெளித் தவர்கள்; அவர்கள் முக்கண்ணர்கள். மனக்கண்ணை நெற் றிக்கண் என்று சொல்லுவர்; அகக் கண் என்பதும் அது.

'முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்'.

என்பது திருமந்திரம்.

மனக்கண் வெளித்த உப அதிபர் முன்னிலையில், என் முகக்கண்கள் படு குருடுகள் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

நெற்றிக் கண்ணராகிய உப அதிபர் ஆகாமியமேறுமல் பிராரத்தத்தைப் புசித்தார் என்பதில் எவ்வித நூதனமுமில்லை. இன்ப துன்ப அநுபவங்களில் வேறுபாடு அவர்பால் தோன்ற வில்லை.

உப அதிபர் கண்ட நூற்றுக் கணக்கான உண்மைகள் எமக்கு எட்டாதவை. அவற்றை நோக்க, ஆகாமியமேறுமல் பிராரத்தத்தைப் புசிப்பதென்பது அற்ப அம்சம்.

நாம் உலக வியவகாரங்களிலிருந்துகொண்டு இடையிடையே ஆத்மீக உலகைச் சிந்திப்பவர்கள்.

நெற்றிக்கண்ணர்கள், ஆத்மீக உலகில் வசிப்பவர்கள்; இடையிடையே நம் உலகுக்கு இறங்குபவர்கள். அவர்களை ஆகாமியம் எட்டியும் பார்க்க இயலாது.

உப அதிபர் கண்ட உண்மைகளுள் உதாரணத்துக்கு ஒன்று வருமாறு:

**"வேதமொ டாகமம் மெய்யாம் இறைவனூல்**
**ஓதும் பொதுவும் சிறப்புமென் றுள்ளன"**

என்பது திருமந்திரம்.

வேதம் பொது; ஆகமம் சிறப்பு என்றதன் கருத்தென்னை? இந்த வினு ஆழ்ந்து சிந்திக்கற்பாலது.

பல்கலைக்கழகத்திற் பிரவேசிக்க விரும்புபவர்கள் அனைவரும் பல்கலைக்கழகப் பிரவேச பரீட்சையிற் சித்தியெய்த வேண்டும். இது கட்டாய விதி; அனைவருக்கும் பொதுவான விதி.

பொது விதியான பிரவேசத்தில் சித்தியடைந்தோர், அதன்மேல் தத்தமக்கு வரத்தக்க துறையை மேற்கொண்டு பலவேறு துறையில் பலவேறு வகுப்புகளிற் பயில்வர். இங்ஙனமாதல் சிறப்பு விதி.

சிறப்பு விதி ஒன்றோடொன்று மாறுபட்டுப் பலவாயிருக்கும்.

சமய சர்வகலாசாலையில் பிரவேசிக்க விரும்புபவர் அனைவருக்கும் வேதம் பொது. வேதநெறி கைவந்தவர்கள்தாம் சமய சர்வகலாசாலையிற் பிரவேசிக்கும் உரிமையுடையர். வேதநெறிக்கு வைதிகம் என்று பெயர்.

வைதிகம் முற்பிறப்பிலோ இப்பிறப்பிலோ முற்றியபோது லபிப்பது சிறப்பு நெறியாகிய ஆகமநெறி. லபித்தல்— கிடைத்தல்.

ஆகமம் எண்ணிலி கோடி என்கின்றது திருமந்திரம்.

'ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணம் கேட்பான் அளவில்லை' என்கின்றது ஞானசம்பந்தக் குழந்தை.

வைதிகம் முற்றுப் பெற்றவர் தத்தம் பக்குவத்துக்கேற்றவாறு கிடைத்த ஆகம நெறியில் நிற்பர்.

அருச்சுனர் கண்ணனின் வழி நின்று வைதிகம் முற்றுப் பெற்றவர். அடுத்த பிறப்பில் அதிதீவிர பக்குவம் மிக்குக் கண்ணப்பரானார்.

பெரிய புராணத்தில் எழுபத்திரண்டு ஆகம நெறிக்கு உதாரணம் காட்டப்பட்டது. அறுபத்துமூன்று தனி நெறி. ஒன்பது தொகை நெறி. தொகையடியார் நின்றநெறி.

இவ்வாற்றால் வேதம் பொது; ஆகமம் சிறப்பு என்பது புலமாம்.

நமது சமயம் வைதிக சைவம். வைதிகம் வேதநெறி; சைவம் ஆகமநெறி. வைதிகம் சைவத்தில் சென்று முற்றுவது; சைவம் வைதிகத்திலிருந்து வருவது.

இத்துணையும் காட்டியவை உப அதிபரின் சார்பால் கிடைத்தவை.

ஆரியம் தமிழ்—முத்தமிழ்—அகம் புறம்—களவு கற்பு—அறுவகைச் சமயம்—துறவு—தொண்டு—உடன்போக்கு—சதாசிவமூர்த்தியின் பதினைந்து கண் ஆராய்ச்சி—உபநிடதம்—'என்மனார்'ப் பிரயோகரகசியம்...................... என்றின்னோரன்ன நூற்றுக்கணக்கான விடயங்கள் பற்றி உப அதிபர் வாசனையால் அறியக்கூடிய புத்தம் புதிய விசாரங்களை விரிப்பில் பெரும் பாரதமாம். ஒரு மந்திரம் பயன்படுத்துமுகத்தால் இருக்காதி வேதங்களுமாயிருக்குமென்பது அவர்களின் அற்புத விசாரங்களில் ஒன்று. 'நம்பிக்கை' என்ற வார்த்தையை அவர் பயன்படுத்தியதில்லை.

அகக்கண் வெளித்த அறிவுக் கடலான உப அதிபருக்கு ஆகாமிய மேருத பிராரத்த அநுபவம் எம்மாத்திரம்!

அத்வைத சிந்தனைக்கு உபகரிக்கும் வகையில் 'உப அதிபரின் ஆத்ம சிந்தனைச் சரித்திரம்' என்றொரு பெரியபுராணம் வெளிவரலாம்.

உ

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம்—7

### நல்வினை

அத்துவித வஸ்துவாகிய இறைவன், உயிர்களின் உய்தி நாடி, மாயையைப் பயன்படுத்திய வழி மாயையாற் கலக்குண்ட இருண்மலமானது, இச்சையில் உற்பத்தியான கன்மப் பிரவாகமாய், இருவினையாய் முகந்துகொண்ட பிராரத்தமாய்க் கழியும்.

பிராரத்தத்தை ஆகாமியம் ஏறுமற் புசிக்க வேண்டும். அவ்வாறு புசிப்பது அருமையின் அருமை.

ஆகாமியக் குவியலே சஞ்சிதம்.

பிராரத்தத்தை ஆகாமிய மேறுமற் புசித்த ஒரு மகானைச் சந்தித்தோம்.

இத்துணையும் முன்னர்ப் பேச்சின் சாரம்.

கன்மப் பிரவாகமாகிய இருவினைகள் காரணமாக, உயிர்கள் பிறவிக் கடலில் கரை துறை காணது உழலுகின்றன.

**'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'**

என்கின்றார் மணிவாசகர்.

'பிறவிப் பெருங்கடல்' என்கின்றார் வள்ளுவர்.

எட்டாத பிறவிக்கடலை, எட்டாத தூரத்தை எல்லை யிட்டுக் காட்டுவது போன்று,

'புண்ணியம், மேல் நோக்குவிக்கும்;
பாவம் கீழ் நூக்கும்' என்கின்றது சித்தியார்.
மேல்—சுவர்க்கம்; கீழ் – நரகம்.

புண்ணியம் நல்வினை; அது சுவர்க்க இன்பத்தை நோக்கச் செய்து, அதில் இச்சையை உண்டாக்கும்.

பாவம் தீவினை; நரகத்தில் அச்சம் பிறப்பிக்கும். அந்த அச்சம் மேலும் சுவர்க்க இச்சையைப் பெருக்கும்.

எல்லாம் அறிந்த ஔவை,

'புண்ணியமாம் பாவம் போம்' என்று புண்ணியமாகிய நல்வினையை 'ஆம்' — செய்யத்தக்கதாம், செய்தே தீர வேண்டுவதாம், என வலியுறுத்தி, 'பாவம் போம்'— பாவமாகிய தீவினை செய்யற்பாலதன்றும் என, 'பாவம் கீழ் நூக்கும்' என்ற சித்தியார் கூற்றை ஆமோதிக்கின்றார்.

'புண்ணியம் ஆம்' என நல்வினையில் இச்சையைப் பெருக்குமாறு வலியுறுத்துவது, ஆழ்ந்து சிந்திக்கற்பாலதாம்.

நல்வினையும் இருள் சேர்வினை என்பதை அறிந்திருந்தும் அதனைச் செய்க என்று வலியுறுத்துவது ஒரு தந்திர உத்தி,

தந்திரம்—நூல், உபாயமுமாம்.
இறைவன்,
'நிறுத்துவதோர் குணமில்லான்'
'ஓடிமீள்கென ஆடல் பார்த்திருப்பவன்'. என்கின் றார் அருணந்திசிவம்.

இறைவன், உயிர்களை 'நில்' என்று தடுத்து நிறுத்துவ தில்லை; உயிர்களின் ஓட்ட ஆட்டங்களைப் பார்த்துக் கொண்டிருப்பவன்; ஓடி ஆடிக் களைத்து 'என் செயலாவது யாதொன்றும் இல்லை' என்கின்றப க்குவ நிலையைப் பார்த்துக்

கொண்டிருப்பவன்; அவன் 'ஆடல்' பார்த்திருப்பவனுமாம். 'ஆள்தல்' பார்த்திருப்பவனுமாம். ஆடல் = ஆடு + அல் எனவும் ஆள் + தல் எனவும் பிரிக்கப்படும்.

இறைவன், நிறுத்தாதே ஆடல் பார்த்திருப்பவன். இந்த அருணிலை யாசாரமே, சான்றோர் மேற்கொள்ளும் ஆசாரம்; ஔவையாராதிச் சான்றோராசாரம்.

சாத்திரங்களில் விதிக்கப்பட்ட நற்கருமங்களைச் செய்து செய்து, சுவர்க்காதி இன்பங்களை அநுபவிக்கும் உயிர்க்கு இன்பங்களை அநுபவிக்கும்போது, இது நிலைக்குமா என்கின்ற ஐயம் எழுந்து, இது உண்மை யுணர்வைத் தராதே என்ற அறிவு உதயமாய், நல்வினையும் பொன் விலங்கே என்ற ஞானம் உண்டாகும்.

இந்த நல்வினையின் உடன்பிறப்பு, தீவினை; அது 'பாவம் போம்' என முன் குறிப்பிடப்பட்டது.

புண்ணியமாகிய நல்வினை சுவர்க்கத்தை எட்ட, பாவமாகிய தீவினை நெறி கீழே நரகத்தை எட்டிக்கொண்டிருக்கும்.

'பாவம் போம்' என்பதில் 'போம்' என்பது விலக்க வேண்டியது, என்ற பொருளேயன்றி தீவினைநெறி நரக உலகுக்கும் போய்ச் சேரும் என்ற பொருளையும் புலப்படுத்தும்.

நல்வினை பொன் விலங்காதலை உணர்தற்கு அதன் சோடியாகிய தீவினையின் பரிபூரண ஒத்துழைப்பு வேண்டும். ஒத்துழைப்பு இல்லையேல், சுவர்க்க வாசியை ஒரு கணத்தில் நரக வாசியாக்கிவிடும்.

நகுஷன் என்பான் சுவர்க்கத்திலிருந்து கீழ் வந்த கதை பாரதத்தில் உள்ளது.

ஒத்துழைப்பாவது, அதுதான் பொல்லாத இருப்பு விலங்கு என்ற உணர்ச்சியைத் தருவதாம்.

இந்தச் சனநாயக உலகில் இருப்பு விலங்கு பூணாத ஒரு மனிதனைச் சுட்டிக்காட்டு என்றால், கார்த்திகைப் பிறையைக் காட்டுவதாய்த்தான் அது இருக்கும்.

இந்தத் தீவினையாகிய இருப்பு விலங்கைத் தகர்ப்பதற்கு வழி என்ன என்பது பெரிய வினா. அவ்வினாவுக்கு இது வழி என்று விடை தந்து, அவ்வழியைக் கடைப்பிடித்தற்கு வழி சொல்லுகின்றார் ஔவையாரின் தம்பியார் வள்ளுவதேவர்.

இனி, தீவினையைப் போக்க வள்ளுவர் காட்டும் வழியைக் காண்போமாக.

இந்திரன் ஒருமுறை அசுரர்க்கஞ்சி, துறக்க எண்ணினான். அவன் துறவு, அச்சத்தால் வந்தது; சுவர்க்க போகப் பற்று அப்படியே இருந்தது.

மெய்ப் பொருளைச் சார்வதனால், பற்றியிருந்த பற்றுக் கள், நித்திரையிற் கைப்பொருள் போல் நீங்க வருவதே துறவு; நீக்க வருவது துறவன்று. அது நரித்துறவு. எட்டாத பழம் நரிக்குப் புளித்த கதை யாவருந் தெரிந்த கதை,

நீங்க வருவதை நீக்கி அடைய முயல்வது தலைகீழ் முறை. சார்புணர்ந்து (பொய்யான) சார்புகெட ஒழுகுவதே முறை.

சீவகன் துறவு, சார்புணர்ந்து வந்த துறவன்று; பகைக் கஞ்சி வந்த துறவு.

வேதத்துக்குப் புறம்பான புறப்புறச் சமயத்துப் பிர சித்தவான்களின் துறவுகள் மெய்ச்சார்புணர்ந்து வந்த துறவு களே யல்ல; நரித்துறவு என்பது அவர்களின் சரித்திரங்களால் அறியலாம்.

இந்திரன் துறவு ஆகாமியமாய், நல்வினைப் பயனை இழந்து, தீவினையில் இறங்கச் செய்து விட்டது. பொன் விலங்கு இருப்பு விலங்காயது.

இனி வள்ளுவரிடம் சென்று மேலே குறிப்பிட்டவாறு தீவினையை விலகி வாழ வழி விசாரிப்போமாக.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 8

### வாழ்க்கை வழி

வள்ளுவதேவரை ஒருவர் அணுகி, தீவினை விளையாமல் வாழ வழி அருளவேண்டுமென்று பிரார்த்தித்தபோது,

'தன்னைத்தான் காதலன் ஆகுக' என்ற உபதேசம் கிடைத்தது.

ஒருவன் தன்மேல் தான் அன்பு உடையவனாயிருக்க வேண்டுமென்பது கருத்து.

காதல்—அன்பு.

மனிதர்கள் ஒவ்வொருவரும் தம்மேல் தாம் அன்பு உடையவராயிருப்பதனாலேதானே,

திரைகடலோடியும், பல்வேறு தொழில்களில் ஈடுபட்டும், சுற்ற மித்திரரை அணைத்தும் ஓயாது உழைக்கின்றார்கள். தம்மேல் தாம் அன்பு உடையராதல் இயற்கைதானே. 'இதற்கு ஒரு உபதேசமும் வேண்டுமா' என்ற கருத்தும் உதயமாகலாம், அந்நிலையில் வள்ளுவதேவர் சிரித்துக் கொண்டே 'ஒருவன்' ''தன்னைத்தான் காதலனாயின்'' அவனால் ஊர்ந்து செல்லும் எறும்புக்கும் 'உறுகண் உண்டாகாதே' என்றார். உறுகண்—துன்பம்.

'' உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு''

என்ற குறளில் வரும் 'உறுகண்' என்ற சொல், இங்கே உபயோகிக்கப்பட்டது.

பிற உயிர்க்குத் துன்பம் வாராது நடத்தல், உயரிய தவ விசேடம் என்பதை உணர்தற்கு அச் சொல் உபயோகிக்கப் பட்டதென்க.

இனி 'தன்னைத்தான் காதலன் ஆயின்' என்று தொடங்கும் திருக்குறளை நோக்குவோம்.

"தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்''.

என்பது அந்த அருமைத் திருக்குறள்.

தன்பால் அன்புள்ளவன் 'தீவினைப்பால்' எத்துணைச் சிறியதொன்றாயினும் செய்யாதிருக்கக்கடவன் என்பது கருத்து.

தீவினைப்பால்—தனக்குத் தீவினையை விருத்திசெய்யும் பகுதி. தீவினைப்பகுதி, நினைவு சொல் செயல் என மூன்று வகை. ஒருயிருக்குக் கேடு நினைந்தாலும் தனக்கே கேடாம்; தீவினையைச் சம்பாதித்ததாம்.

இந்த மனித சரீர விளக்கிற் பிரகாசிக்கும் அறிவு சிற்றறிவேயாயினும், நன்மை தீமைகளைப் பிரித்தறிய உபகாரமானது; பிறர்க்குத் துன்பம் விளையாமல் நடப்பதன் அருமை பெருமைகளை உணரவல்லது. ஆயினும்,

அறிவைப் பயன்படுத்தித் தன்னைத்தான் காதலனை ஒரு மனிதனைச் சுட்டிக்காட்டுக என்றால், கார்த்திகைப் பிறை காட்டுவதாய் விடுகின்றது.

### ஒரு நல்ல கதை :

அமெரிக்காவில் ஒரு கிராமம். அக்கிராமத்தில் ஒரு கடை. நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு சிறுவன் அக் கடையை நடத்திக்கொண்டிருந்தான். ஒருநாள் இரவு அக்கிராமத்தில் ஒரு திருவிழாக் கொண்டாட்டம். இரவு முழுவதும் கடை திறந்திருக்கவேண்டியது. விடியச் சற்று முன்னம், சனங்களின் நடமாட்டமும் குறையும் நேரம். கடைக்கதவில் ஒரு பலகையைப் பூட்டாமல் சாத்தியபடி வைத்துவிட்டு, சிறுவன்

இருந்தபடி நித்திரைத்தூக்கத்தில் இருந்தான். இன்னும் நன்கு விடியவில்லை. பாட்டி ஒருத்தி, கதவில் தட்டி பூட்டாத பலகையைத் திறந்து, ஒரு இருத்தல் தேயிலே கேட்டாள். சிறுவன், நிறுத்துத் தேயிலே கொடுத்துவிட்டுக் கிழவி கொடுத்த பணத்தையும் நிறுத்த படியையும், தராசுத் தட்டொன்றில் வைத்துவிட்டு, இருந்தபடியே தூங்கிவிட்டான். விடிந்தது. விடிந்ததும் சிறுவன் தராசை நோக்கினன். அரை இருத்தல் படியும் ஒரு இருத்தல் தேயிலேக்குரிய பணமும் தராசில் இருக்கக் கண்டான். சரீரம் பதறியது. அரை இருத்தல் தேயிலேக்கு, ஒரு இருத்தல் தேயிலேக்குரிய பணம் வாங்கினேனே என்று ஏங்கினன். உடனே, அரை இருத்தல் தேயிலே நிறுத்து எடுத்துக்கொண்டு, கிராமம் கிராமமாக ஓடினன். இராத்திரித் தேயிலே வாங்கிய பாட்டி யார் என்று, விசாரித்து விசாரித்து ஓடினன். எங்கோ ஒரு கிராமத்திற் பாட்டியைக் கண்டுபிடித்துவிட்டான். பெரிய சந்தோஷம்—அமிர்தத்தைக் கண்ட தேவர்களின் மகிழ்ச்சி. மன்னிப்புக் கேட்டுக்கொண்டே பாட்டி கையில் மிகுதித் தேயிலேயைக் கொடுத்தான். பாட்டி கண்ணீரால் சிறுவனே முழுக்காட்டினுள். அவ்வளவில் அடங்காது வாழ்த்துரை வழங்க வாயெடுத்தாள். ஆனந்த மிகுதியால் வாயடைத்துக்கொண்டது. அப்படியிருந்தும் ஏதோ சொல்லத் தொடங்கினுள். வாழ்த்தைக் கேட்டுக்கொண்டு நிற்க நேரமின்றிச் சிறுவன் பறந்தோடி மறைந்தான். நேரத்துக்குக் கடை திறக்க வேண்டுமே! அந்தச் சிறுவனுன பெருமகன் யார் தெரியுமா?

அந்தத் தேயிலே விற்ற பெருமகனே ஒருகாலத்தில் அமெரிக்க ஜனுதிபதியானுன். அந்த ஜனுதிபதியே ஆபிரகாம் லிங்கன்.

ஆபிரகாம் லிங்கன் ஜனுதிபதியானபோது, தேயிலேப் பாட்டி உயிரோடிருந்தால் அந்தப் பாட்டிக் கன்னிகையை வர்ணிக்க ஒரு காவியம் வேண்டுமே! இந்தத் தர்மபூபதியான ஆபிரகாம் லிங்கன் போன்று, ஒரு 'தன்னேத்தான் காதலனே இந்தச் சனநாயக உலகில் காணக் கேட்க முடியுமா? ஒரு விரல் மடிக்க இயலுமா?

ஒவ்வொரு சனாதிபதியின் மாளிகையும், மற்றும் பிரமுகர்களின் வீடும், ஆபிரகாம் லிங்கன் படத்தைச் சுட்டிக் காட்டி, தேயிலை நிறுத்த கதையைச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டாமா?

* * *

பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னால் ஒரு கோவலனுக்கு மரணம் நேர்ந்ததே என்று ஏங்கித் தன்னுயிர் நீத்தான்.

" வல்வினை வளைத்த கோலை.
செல்லுயிர் நீத்துச் செங்கோ லாக்கியது"

என்று உலகம் பாராட்டுகின்றது.

" தென்னவன் தீதிலன்;
தேவர்கோன் தன்மனை
நல்விருந் தாயினான்"

எனத் தெய்வக் கண்ணகி பாராட்டுகின்றாள்.

" வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்".

என்னும் திருக்குறள் நினைவுக்கு வருகின்றது.

பாண்டியன் 'தன்னைத்தான் காதலன்' என்பதிற் சந்தேகமுண்டா!

மநுநீதிகண்ட சோழன் புதல்வன் சென்ற தேர்ச்சில்லில் ஒரு பசுக்கன்று தற்செயலாக அகப்பட்டு உயிர் துறந்தது. அப்பொழுது அந்த இளவரசன் பட்டபாட்டை யாரால் வருணிக்க முடியும்! அதற்குக் கழுவாய் தேடி முனிவர்களைச் சரணடைந்தான் அப்புதல்வன். அதில் திருப்தியுறாத தந்தை கழுவாய் இதுவென்று முறைசெய்தான்.

" மண்ணவர்கண் மழை பொழிந்தார்;
விண்ணவர்பூ மழை பொழிந்தார்."

கன்று துள்ளியெழுந்தது; மகன் தந்தையைக் கட்டித் தழுவினான். அந்தச் சோழனை, மைந்தனை விஞ்சித் 'தன்னைத்தான் காதலனை' தேவ உலகிற்றானுங் காண முடியுமா?

' தன்னைத் தான் காதல் '
இருந்தவாறு!

௬

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 9

### வாழ்க்கையின் அத்திபாரம்

இந்தச் சரீர விளக்கில் பிரகாசிக்கும் அறிவு, சிற்றறிவே யாயினும்,

நன்மை தீமைகளைப் பகுத்துணரவும், பிற உயிர்களுக்கு உறுகண் வாராமல், தம்மேல் அன்புடையராய் வாழவும், காத்திராப் பிரகாரம் பிற உயிர்க்குத் தம்மால் உறுகண் நேருமாயின், அதற்குப் பரிகாரந் தேடவும் வல்லதாம்.

ஆனால், இங்கே குறிப்பிட்ட வல்லமையைப் பகிரங்க உலகிற் பயன் செய்த—செய்கின்ற—செய்யக்கூடிய ஒருவரைச் சுட்டிக்காட்டுக என்றால், ஒரு விரல்தானும் மடிக்க முடியாத நிலையே காணப்படுகின்றது.

தம்மால் பிற உயிர்க்குத் தாக்கம் உண்டானபோது, பரிகாரங்கண்ட பழையோர் சிலரையும், அண்மைக் காலத்து அமெரிக்கக் கிராமவாசி ஒருவரையும் கண்டோம்.

இத்துணையும் முந்திய பேச்சின் சாரம்.

ஒருவன் பிற உயிர்க்கு உறுகண் விளையாமல் நடத்தல், அவன், 'தன்னைத்தான் காதலன்' என்பதற்கு நல்ல அறிகுறி, இதுவே, அஃதாவது, தன்னைத்தான் காதலனாய் உயிர்க்கு உறுகண் விளையாமல் நடத்தல், வையத்துள் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கைக்கு, மூலாதார தத்துவம்; அடிப்படை அத்திபாரம்; அசைக்க முடியாத வைரித்த அத்திபாரம்.

இவ்வத்திபாரம் சித்தித்தல் எவ்வாறு என்பது பற்றியும், அத்திபாரத்தின் இன்றியமையாமை பற்றியும் சற்றே சிந்திப்போம்.

இவ்வத்திபாரம் எங்ஙனம் சித்திக்கும் என்பது பற்றி முதற்கண் ஆராய்வோம்.

குறிப்பிட்ட மூலாதாரதத்துவம் சித்தித்தற்கு பிராரத்த அநுபவம் வரும் வழிவகைகளை ஆராய்வது பயனுடைத்தாம்.

இன்பத் துன்பங்களான பிராரத்த அநுபவங்கள் வரும் வாயில்கள், ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என முத்திறப்படும்.

ஆதிதைவிகம் — தெய்வம் காரணமாக வரும் இன்பத் துன்பங்கள். ஆத்தியான்மிகம் — உயிர்கள் வாயிலாக வரும் இன்பத்துன்பங்கள். ஆதிபௌதிகம் — பூதங்கள் வாயிலாக வரும் இன்பத்துன்பங்கள்.

பூதங்கள், ஆகாயம் ஈருன பூதங்கள். ஆகாயம் பருவ மழை பொழிந்து இன்பத்தையும் இடிமுழக்கங்களால் துன்பத்தையும் விளைப்பதைக் காண்கின்றோம். இவ்வாறே ஒவ்வொரு பூதத்தாலும் நன்மையும் தீமையுமாய இன்பத்துன்பங்கள் அநுபவிக்கின்றோம்.

தன்னைப்பற்றி வருவன, பிற உயிரைப்பற்றி வருவன, தெய்வத்தைப்பற்றி வருவன என வகுப்பதுமுண்டு. இவை. மேற்கூறியவற்றில் அடங்கும். தன்னைப்பற்றி வருவது ஆத்தியான்மிகத்தில் அடங்கும். தன்னைப்பற்றி வருவது, உணவு முதலியவற்றால் உடம்பைப் பேணுமையாலும், நன்கு பேணுவதாலும் வருவன.

இவை தவிரக் கிரகங்களின் தசை புத்திகளால் வருவன. கிரகங்கள் இறைவன் ஏவல்வழி நிற்பன. கிரகங்களால் வருபவை ஆதிதைவிகத்தில் அடங்கும்.

பிராரத்த அநுபவ வாய்தல்களில் துன்பம் வரும் வாய்தல்களே முதற்கண் ஆராயவேண்டும்.

'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்பது, 'யாதும் ஊரே' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலின் இரண்டாம் அடி. அந்த அடியில் 'தீது பிறர்தர வாரா' என்பதை நன்கு ஆராய்ந்து, நாம் அநுபவிக்கும் அநுபவத்துக்கு நாமே கருத்தா என்பது ஸ்திரமாக வேண்டும்.

கண்ணகி, தெய்வக் கண்ணகியாய் மாறியதும், 'பாண்டியன் வெறும் வாயில்; கோவலன் வினேயே அவன் மரணத்துக்குக் காரணம்' என்பதைக் கண்டாள்.

'தென்னவன் தீதிலன்' என்பது தெய்வக் கண்ணகி கூற்று. துன்ப அநுபவத்துக்கு, அது வந்த வாயிலே நோவது எய்தவனிருக்க அம்பை நோவதாம்.

தன் துன்ப அநுபவத்துக்குத் தானே கருத்தா என்பது ஸ்திரமானதும் பகைமை என்ருெரு பண்டம் இல்லேயாய் விடும். அஃது இல்லேயாகவே பிற உயிர்க்கு உறுகண் விளே யாமல் நடப்பது தானுகவே சித்திக்கும்; இது சித்திக்கு மானுல், வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையின் அடிப்படை அத்திவாரம் ஸ்திரமாய்விடும். வாழ்க்கையின் அடிப்படை ஸ்திரமாதற்கு இன்ப வாய்தல்களே ஆராய்வது முக்கியமன்று என்பது பின் ஆராயப்படும்.

ஆகவே துன்ப அநுபவ வாய்தல்களே ஆராய்வதே இன்றி யமையாததென்பது பெற்ருும். இன்றியமையாததான இது சித்தியாமல், வேறெந்த நற்கருமஞ் செய்தாலும், அக் கருமம் அத்திவாரமின்றிக் கட்டிய கட்டடம் போலப் பாழாகும்.

சிலர் மனத்தை நெறிப்படுத்தலே வாழ்க்கையின் மூலா தார அடிப்படைத் தத்துவம் என்று நினேக்கிருர்கள். நமக்குக் கிடைத்த அறிவு கொண்டு, பிறர்க்கு—பிற உயிருக்கு..... இடுக்கண் வராமல் வாழ்க்கை அமைந்த பின்பே, மனத்தை நெறிப்படுத்த முடியும். மனம், இறைவன் அருளிய தத்துவம்; அதை நம் அறிவால் நெறிப்படுத்த இயலாதென்பது, 'இந் திரியம் எனேப் பற்றி ஈர்ப்பது தந்தவன் தன் ஆணே' என்ற

சித்தியாரால் அறியலாம். கிரகம் ஆதிதைவிகமாய் எவ்வளவு வலியுடைத்தோ அவ்வளவு வலி படைத்தது மனம்.

* * *

தன் துன்ப அநுபவத்துக்குத் தானே கருத்தா என்பதைப் பல வேறு முகமாக விசாரஞ் செய்து வாழ்பவர்கள் தம் வாழ்க்கையால் ஊர்ந்து செல்லும் எறும்புக்கும் உறுகண் விளையாமல் நடந்துகொள்வார்கள். தம்மால் மற்றொரு உயிர்க்கு உறுகண் விளையுமானால், தாம் அநுபவிக்கும் துன்ப அநுபவத்தை மேலும் கூட்டுவதாயிருக்கும் என்பதைத் தெட்டத்தெளிய அறிவார்கள். இப்படிப்பட்டவர்களின் வாழ்க்கை தெய்வத் தன்மை பொருந்தியதாய் இருக்கும். அவர்களை மனிதத் தெய்வம் என்றே உலகம் போற்றும். அப்படிப்பட்ட மனிதத் தெய்வத்தைப் பகிரங்க உலகிற் காண்பது அரிதினும் அரிது. ஆயினும், இந்த நூற்றாண்டில் ஒரு மனிதத் தெய்வத்தைக் காணக்கூடியதாயிருந்தது. இனி வரும் சந்ததியினருக்கு அறிவித்து வைக்கும் முகமாக, அந்த மனிதத் தெய்வத்தின் வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியையாயி னும் தெரிவித்துவைக்க ஆசை உண்டாகின்றது. அவருக்குச் சனங்கள் வழங்கிய பெயர், தரும ஏசண்டர். அவரது இயற் பெயர் பிறீமன்; விறீமன் என்று சொல்வதுமுண்டு; உயர்ந்த இராச குடும்பத்தைச் சேர்ந்த வெள்ளையர் அவர்.

1910ஐ அடுத்து கவர்மெண்ட் ஏசண்டராய், யாழ்ப்பாணம் கச்சேரியில் வசித்தவர் பிறீமன். அவரிடம் 'பைசிக்கிள்' ஒன்றே ஒன்று உண்டு; அதில் எங்கும் மெல்ல மெல்லச் சென்று கொண்டிருப்பார். தம் அதிகாரத்துக்குட்பட்ட கிராமங்கள், மூலைமுடுக்குகள் அனைத்தும் அவருக்குத் தெரியும். அப்பம் விற்றுப் பிழைப்பவர், கடலை விற்றுப் பிழைப்பவர், ஒன்றுக் கும் வழியில்லாதவர் அனைவரையும் அவர் அறிவார். அவர் அவர்களோடு தங்கி, அவர்கள் உணவிற் பங்குகொண்டு, அவர்களுக்கு வேண்டியது செய்துவைப்பார். அவர், மெல்லச் சயிக்கிளிற் போகும்போது சனங்கள் தெருவோரங்களில் நின்று தரிசித்து வணங்குவார்கள். 1910இல் நான் படிக்கும் போது அந்தத் தெய்வ மனிதரைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

யாழ். கச்சேரியில் அவரிருக்கும் மேசையில் சிறு குளவி யொன்று கூடு கட்டிவிட்டது. அதனைக் கண்ட பிறீமன்துரை, கூட்டுகிறவர்கள் அங்கே பணி செய்பவர்கள் அனைவரையும் அழைத்து, அந்தக் குளவிக் கூட்டைக் காட்டி, அது குஞ்சு வைத்துக் கலையும்வரை அக் கூட்டை ஒருவரும் கலைக்கக் கூடா தென்று பணித்தார்.

ஒரு நாள் செம்மணி வழியாய் அவர் பயணஞ் செய்த போது, நெற்பயிர்கள் வாடிக் கருகுவதைக் கண்டார்; சகிக்க முடியவில்லை. நட்டுநடு மத்தியானம்; நெருப்பு வெய்யில். பைசிக்கிளை ஓரிடத்தில் வைத்தார்; தொப்பி சப்பாத்து இரண்டையுங் கழற்றினார்; வயல் ஒன்றின் மத்தியில், முழந் தாளில் நின்று ஆண்டவனை வேண்டினார்; வெயர்வை பெருகி வழிந்தது; அவர் அசையவில்லை; கண்களில் நீர் பெருகியது. எங்கோ இருந்து முகில் ஒன்று எழுந்து, கறுத்தது; மழை பொழிந்தது. தரும ஏசண்டுத்துரை தலை முழுகிச் சட்டையி லிருந்து நீர் பொழியத் தெருவுக்கு வந்தார். அந்தத் தெய்வ மனிதர் 'பெய்யெனப்' பெய்தது, மழை.

ஒரு நாள் இரவில் விளக்கின்றி வந்த ஒரு வண்டிக்காரன், கல்வியங்காட்டான். வண்டி வந்தபோது வண்டியைக் குனிந்து பார்த்து வண்டி இலக்கத்தைப் பார்க்க முயன்றார் ஏசண்டுத் துரை. அப்போது மாடோட்டுந் தடியால் துரையின் முதுகில் மொத்து மொத்தென்று மொத்திவிட்டான். துரை ஒதுங்கி விட்டார். அவன் வீடு சென்றபின், அவன் வீட்டைக் கண்டு பிடிக்க அடையாளம் செய்துவிட்டு, மறு நாள் பொலிசை அனுப்பினார். அவன் ஏசண்டு என்று அறிந்ததும், நடுங்கிக் கொண்டு அவர் முன் சென்றான். துரை அவனை நோக்கி 'நல்ல அடிகொடுத்தேன் என்று சொல்லிக்கொண்டு போ' என்றார்; அவர் செய்த தண்டனை அவ்வளவே. அவன் அக் கணமே வெண்ணெயாய்ப் போயினான்; அவரை நினைந்து மனமுருகிக் கண்ணீர் வடித்துக்கொண்டே வீடு சென்றான்.

அவர் இளைப்பாறிய பின், அநுராதபுரத்தில், ஏழை பங்காளராய் வசித்தார்; அவரைச் சட்டசபைக்குச் சனங்கள்

அனுப்பினார்கள். அவர் கொழும்பில் வெள்ளையர் வீடுகளில் தங்குவார். அவர்களின் குளிப்பறைகளில் கழித்துவிட்ட துவாய்கள், பெனியன்கள், சட்டைகள் என்றிவைகளைச் சேர்ப்பார். ஒரு லொறி கொள்ளத்தக்க அளவு வந்துவிடும். அவர் திரும்புகிறார் என்றறிந்ததும், ஏழைகள் பிள்ளைகுட்டிகளோடு கொடிவிட்டு வந்து சேர்வார்கள். அவர் ஒரு சிறு குடிசையில் கயிற்றுக் கட்டிலொன்றில் படுத்திருப்பார்; சனங்கள் வத்து சேர்ந்ததும், ஒவ்வொருவரையும் விசாரித்துத் தான் சேர்த்துக் கொண்டுவந்த பண்டங்களைப் பங்கிட்டுக் கொடுப்பார். தெரிவு காலங்களில் இவரை எதிர்த்துப் போட்டியிடுபவர்கள் கட்டுக்காசை இழப்பவராயிருந்தார்கள். அவர் தமக்கு வாக்குப் போடுங்கள் என்று கேட்பதில்லை; தமக்குரிய சின்னத்தைத் தொப்பியில் கட்டிக் கொண்டு, வாக்குப் போடுமிடத்துக்குப் போய் வருவார்; அவ்வளவே அவர் செய்வது.

ஒரு சமயம் றெயிலைத் தடைசெய்யும் எருமைகளைச் சுட வேண்டும் என்றார் சேர் பொன். இராமநாதன்; சுடக்கூடாது என்றார் பிறீமன். என்ன செய்வதென்ற கேள்வி எழுந்தது; என்ன செய்யலாமென்பதை நீங்களே தீர்த்துக்கொள்ளுங்கள் என்றார் பிறீமன்.

பத்திரிகையில் ‘ எருமையும் இராமநாதனும் ’ என்று பெரிய எழுத்தில் கட்டுரை வந்தது. நாவலர்பெருமான் இருந்தால் ‘ தீன தயாளு ’ என்ற பட்டத்தைப் பிறீமனுக்கு வழங்கியிருப்பார்.

நாவலர் வித்தியாசாலையில், நாவலர் தமையனார் புதல்வர் பிறீமன் துரையின் படத்தை எல்லாருந் தரிசிக்க பிரசித்தி பெற்ற மேடையில் திறந்துவைத்தார். பிறீமன் தம்மைப் படமெடுக்க இடங்கொடுப்பதில்லை. எப்படியோ யாரோ எடுத்த படம் கிடைத்துவிட்டது.

பிறீமன் துரையின் அற்புத சரித்திரம் அநேகம்.

பாடபுத்தகங்களில் அவர் சரித்திரம் வரவேண்டும்.

# அத்வைத சிந்தனை — 10

## கன்மம் — 10

### தூய வாழ்க்கையின் வளர்ச்சி

வாழ்க்கையின் இன்றியமையாத வைரித்த மூலாதார தத்துவம், 'தீது பிறர்தர வாரா' என்பதை, பிராரத்த துன்ப அநுபவ மூலம் அறிவது பற்றியும்; துன்ப வாயில்கள் வெறும் கருவிகள் என்பது பற்றியும்; இவற்றின் தொடர்பில், உயிர்க் குறுகண் விளையாமல் வாழ்வது பற்றியும்; உயிர்க்குறுகண் விளையாமல் வாழ்ந்த மகான் பிறீமன்துரை பற்றியும் முந்திய பேச்சில் விளக்கம் செய்யப்பட்டது.

இனி, 'நன்றும் பிறர்தர வாரா' என்பது பற்றிச் சிந்திப் போம்.

தருமம் ஞானம் என்ற இரண்டையும் எடுத்துக்கொண்டு எது முதற்கண் அநுட்டிக்கற்பாலது என்று வினவினல் ஞானத்துக்குத் தவணையிடலாம்; பொறுத்துச் சிந்திக்கலாம். தருமத்துக்கோ தவணையிடலாகாது. தருணம் நேரும் அக் கணமே செயற்பாலது தருமம்.

'அன்றறிவாம் என்ஞது அறஞ்செய்க' என்பது வள்ளுவர் கூற்று.

'தீது பிறர்தர வாரா' என்பது, தருமம் போன்றது; அக்கணமே அநுட்டிக்கற் பாலது.

'நன்று பிறர்தர வாரா' என்பது, பெரிய உண்மையே யாயினும், இப்பொழுது அந்த உண்மை நமக்கெட்டாதது; வெகு உச்சத்தில் உள்ளது.

இப்பொழுது நன்று எனப்படும் பிராரத்த இன்ப அநுபவத்தை, எவர்கள் வாயிலாகப் பெறுகின்றோமோ, அவர்களே அந்த இன்ப அநுபவத்தை அளிப்பவர்கள் என்றே கொள்ளவேண்டும். அங்ஙனமே கொள்ளுகின்றோம். அங்ஙனம் கொள்ளுதல் இயற்கையாகவே நம்பால் அமைந்திருக்கிறது. அது தூய வாழ்க்கையை வளர்ப்பதற்குத் தண்ணீர் ஊற்றுவதாயிருக்கும்.

' அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் ' என்பது ஔவை வாக்கு; அவர்கள் வெறும் வாயில்கள். நம் நல்வினை அன்னை தந்தையர் மூலம் வந்தது; ஆகையால் அவர்கள் வெறும் வாயில்கள் என்று குழந்தைகள் நினைக்கலாமா நினைக்குமா? நினைப்பதே இல்லை.

குழந்தைகள் தம் இன்ப அநுபவத்திற்கு, அதனைத் தந்த தாய் தந்தையர்களையே கட்டியணைக்கின்றன; அது மிகவும் சரி.

' நன்றி மறவேல் '

' உதவி வரைத்தன்று உதவி; அது செய்தவர் சால்பின் வரைத்து'

'சான்றோ ரினத்திரு'

'பெரியோரைக் கனம்பண்ணு'

என்ற நீதி சாஸ்திர வாக்குக்கள் அனைத்தும், இன்ப அநுபவம் வரும் வாயில்களையே வாழ்த்தி வணங்கும்படி போதிக்கின்றன. அவை வெறும் வாயில்கள். அவர்களுக்கூடாக இறைவன் ஊட்டுகின்றான் என்ற உண்மையை அநுபவ சாதக மூலம் அறியும்வரை, நாம் வாயில்களையே வாழ்த்தி வணங்கவேண்டும். உண்மை அநுபவ நிலை எங்கே! நாம் எங்கே!!

நாம் பெரியோரை வணங்க அவர்கள் எதிர் வணக்கம் செய்வது, நம் மூலம் இறைவன் இவர்களுக்கு ஊட்டுகின்றானே என்று இறைவனை வணங்கும் வணக்கமேயாம் என்பதும் அறியற்பாலதாம்.

நாவலர் நான்காம் பாலபாடத்தில், 'தருமம்' என்ற பாடம் எழுத்தெண்ணிப் படிக்கற்பாலதாம்; தூய வாழ்க்கையை வளர்த்தற்கு அப் பாடம் வழிசெய்கின்றது.

சாத்திரங்களில் உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என ஐந்து வழிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

உலகவினை: கிணறு, குளம், தண்ணீர்ப் பந்தல், அன்ன சத்திரம் முதலியன அமைத்தல்.

வைதிகவினை: வேள்வி முதலியன செய்தல்.

அத்தியான்மிகவினை: சிவபூசை முதலியன செய்தல்,

அதிமார்க்கவினை: யோகஞ் செய்தல்.

மாந்திரவினை: மந்திரம் செபித்தல், ஞான நூல்களை ஓதல் முதலியன.

இவ்வைந்தும் ஒன்றற்கொன்று ஏற்றமுடையன.

கல்லால் நிழலில் இறைவன் தக்ஷிணாமூர்த்தியாய், நால்வர் முனிவர்க்கு சின்முத்திரை மூலம், ஒளி நெறி காட்டி மௌன நாடகம் நடாத்திக்கொண்டிருந்தார்.

அம் முனிவர்கள், 'தீது பிறர்தர வாரா' என்பதுபோல,

'நன்றும் பிறர்தர வாரா' என்பதைத் தெட்டத்தெளிய உணர்ந்து, தம் வினையை இறைவன் ஊட்டுவதை நேரில் உணரும் அதிதீவிர பக்குவர்கள் ஆகலாம். இந்நிலை, முதிர்ந்த சத்திநிபாத நிலை; அத்துவித முத்தியை அண்மிக்கும் நிலை.

'யாதும் ஊரே' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலில்,

இறுதியடியின் முதற்பகுதி,

'பெரியோரை வியத்தலும் இலமே' என்பது,

பெரியோருக்கு ஊடாக இறைவன் ஊட்டுவதை அநுபவ பூர்வமாக உணர்ந்தவர்கள், வாயில்களாகிய பெரியோர்களை தம்மைப்போல மதிக்க வேண்டுவதில்லை என்பதாம்.

'வியத்தலுமிலமே' என்ற வாய்பாடு சிந்தனைக்குரியது. பெரியோர், சிறியோர் வரிசையைச் சேர்ந்தவர்கள் அல்லர், அவர்கள் வெறும் வாய்தல்களேயாயினும், மதிப்புக்குரிய வர்கள் என்ற கருத்துக் கொள்ளத்தகும்.

சிறியோர், வெறும் வாய்தல் என்பது, 'தீது பிறர்தர வாரா' என்பதை ஆராய்ந்தபோது தெளியப்பட்டது.

'தீது பிறர்தர வாரா' என்பதை உணர்வது, மூலாதார அடிநிலைத் தத்துவம்.

'நன்று பிறர்தர வாரா' என்பதும்; அதனால், 'பெரி யோரை வியத்தலும் இலமே' என்பதும் வாழ்க்கை வளர்ச்சி யின் உச்சமான முடிநிலைத் தத்துவம்.

இந்த அடிநிலை முடிநிலைத் தத்துவங்கள் நன்கு சிந்திக்க வேண்டியவைகள்.

முடிநிலைத் தத்துவ முடிவே, சுத்தாத்துவித முத்திப் பேற்றுக்கு வழிசெய்வது. சுத்தாத்துவிதம் என்பதில் சுத்தம், சுத்த அவஸ்தை.

கேவலத்தில் ஆணவத்தோடு அத்துவிதமான ஆன்மா, சுத்தாவஸ்தையில் மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவித மாம்.

சாரம் :

'தீது பிறர்தர வாரா' என்பது, தருமச் சாதி; உடன் தொடங்க வேண்டியது. இளமை தொடங்கிப் பருவத்துக் கேற்றவாறு, இயன்ற அளவு வளர்க்க வேண்டியவர்கள் வளர்த்துவரல் வேண்டியது.

'நன்று பிறர்தர வாரா' என்பது, ஞானச்சாதி; பொறுத்துத் தொடங்கற்குரியது. அது பெரியோர்கள் தர வருவது, என்ற வகையில், வாயில்களை மதிக்கும் முறையில் வளர்த்து வரல் வேண்டியது, என்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

முன்னையது அடிநிலை; பின்னையது முடிநிலை.

* * *

**முடிவுரை:**

அவன் தானாய் அத்துவிதமானபடி மாசகன்று,
'தான் அவனாய் அத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ' என்ற சூத்திரத்தை நினைவுகூர்வோம்.

முதலாவது அத்வைதக் கட்டுரையில் இச் சூத்திரம் உதயமானது.

அவன் என்றது இறைவனை. தான்—ஆன்மா.

இச் சூத்திரத்தில் 'மாசகன்று' என்ற வார்த்தை கருத்துள்ளது.

மாசு போக்குதற்குரிய அவஸ்தை, சகலாவஸ்தை. திருவருள், ஆன்மாவுக்கு அத்துவிதமுத்தி அருளும்பொருட்டு மாயையைப் பயன்படுத்தும் அவஸ்தை, சகலாவஸ்தை.

'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்' என்பது,
நாவலர் இரண்டாம் பாலபாடத்து முதல் வசனம்; இது சர்வசாத்திர சார சங்கிரகம்.

முத்தியின்பம் என்பதில் முத்தி—விடுதல்; அறியாமை இருளை விடுதல்.

இன்பம் அத்வைத முத்தி இன்பம்.

இவ்வளவில் 'அத்துவிதப் பேச்சு' முற்றும்.

அநுபந்தம்

# சைவசித்தாந்தம் எங்கே!
# நாம் எங்கே!

சான்றவ ராய்ந்திடத் தக்க வாம்பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆரு யிர்த்தொகை
வான்றிகழ் தளையென வகுப்ப ரன்னவே.

—காசிபர் உபதேசம் - கந்தபுராணம்

பதியைப் போற்பசு பாசம் அநாதி

—திருமந்திரம்

முப்பொருள் உண்மை பற்றியும், அவற்றின் தொடர்பு, பந்தநிலை, முத்திநிலை என்பன பற்றியும், திருவருள் கைவந்த திருவருட் செல்வர்களான, சிவாநுபூதிமான்கள் அநுபவ பூர்வமாகக் கண்டவைகளை, திருமுறைகளிலும் சைவ சித்தாந்த நூல்களிலும் காணலாம்.

திருமுறைகள் தோத்திரங்கள்; சைவசித்தாந்தம் சாத்திரம்.

தோத்திரம், இறைவன்பால் ஈடுபாடு மிக்குச் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு எழுவது. சாத்திரம் ஓரளவு தகுதியுள்ளவர்களுக்குச் சமய தத்துவங்களைப் போதிப்பது. சாத்திரங்கள் கூறும் உயிரான உயரிய கருத்துக்களுக்குத் தோத்திரம் அரணுயிருக்கும்.

உயிரான உயரிய கருத்துக்களுக்கு மூலவித்து வேதாகமங்கள்.

திருமுறைகளில் திருமந்திரம் புறநடையானது. அது தோத்திரமுமாம், சாத்திரமுமாம். அன்றி, சில பகுதி சித்த

பரிபாஷையோடு கூடியதுமாம். திருமந்திரத்தையும் வேதாகம வரிசையில் வைத்துக்கொள்ளல் சாலும்.

தோத்திர சாத்திரங்கள், மூல வித்துக்களின் இருவேறு வெளிப்பாடுகள்.

சைவ சித்தாந்த சாத்திரங்களில் சிவஞானபோதம், சித்தியார், சிவப்பிரகாசம், திருவருட்பயன் நான்கையும் பிரஸ்தான சதுட்டயம் என்று கொள்ளலாம்.

உபநிஷதம், பிரமசூத்திரம், கீதை மூன்றையும் பிரஸ்தானத்திரயம் என்பர். மேனிலையை அடைவிக்கும் மூன்று நூல்கள் என்பது கருத்து. பிரஸ்தானம் மேனிலை. திரயம் மூன்றையும், சதுட்டயம் நான்கையுங் குறிப்பன.

சதுட்டய ஆசிரியர்கள், தாமெடுத்துக்கொண்ட பதியாதி பொருள்களின் தொடர்பை நியாயித்து, நிரூபித்துக்காட்ட வல்ல ஞானிகள். ஆனால் சதுட்டயம் அந்த முறையில் அமையவில்லை. நிரூபித்துக்காட்டும் வேலையைச் சதுட்டயம் எடுத்துக்கொள்ளவில்லை. நம்மனோர்க்கு எவ்வளவு சொல்லலாமோ அவ்வளவைத்தான் அது சொல்லும்.

நுட்ப விஞ்ஞான கணித உண்மைகளை, அவைகளை நிரூபணஞ்செய்து காட்டுக என்றால் அவர்கள் (உண்மைகளைக் கண்ட விஞ்ஞான கணித மேதைகள்) மௌனிகளாய் விடுவார்கள். ஐன்ஸ்ரீன் என்ற விஞ்ஞான மகாமேதையின் 'நேரமும் தூரமும்' என்ற கண்டுபிடிப்பை விஞ்ஞானிகளுள் விரல்விட்டெண்ணத்தக்க ஒரு சிலருக்கே ஐன்ஸ்ரீனால் நிரூபித்து விளக்கஞ்செய்ய முடியும் என்பார்கள்.

கண்டுபிடிப்பின் பயனை உலகம் அநுபவித்துவருகின்றது.

உடலை, உயிர் இயக்குகின்றது; உயிரை உயிர்க்குயிர் இயக்குகின்றது. உயிர்க்குயிர் இறைவன். இறைவன் உயிரை இயக்காதபோது உடல் பிணமாகும். ஆகவே உடலை உயிர் மூலம் இயக்குவோனும் அந்த இறைவனே. இந்த மெய்ஞ்ஞான உண்மையை நம்மால் நிரூபித்துக் காட்ட இயலாது.

ஒரு சமயம் தேவர்கள் திருமுருகனின் திருவிளையாடலின் இரகசியத்தை அறியாது திகைப்புற்று,

**பற்றிய தொடர்பையும் உயிரையும் பகுத்து**
**இற்றென உணர்கிலம்.**

இப்படிப்பட்ட நாமா, உயிர்க்குயிரான திருமுருகன் திருவிளையாடலை அறிய வல்லோம் என்கின்றார்கள். தேவர்களே, உடலின் வேறாக உயிரைப் பிரித்தறிய முடியவில்லையே என்பார்களாயின், நாம் எம்மாத்திரம்!

ஆகவே, பதி பசு பாசத் தொடர்புகளைப் பாடம் பண்ணிக்கொண்டிருப்பதுதானா நமக்கு வேலை, என்று வினவலாம். இதோ விடையை அணுகுவோம்.

நம்மால் நிரூபிக்க முடியாத மெய்ஞ்ஞான உண்மைகளைக் காணும்போது நம் நிலைமையைக் கண்டுபிடிக்கலாம்.

ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கு; அவற்றுள் ஒன்று மனத் தத்துவம். மனக் கோளாறு யாருமறிந்தது.

**'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்..........'**

என்பது வள்ளுவர் வாக்கு. மனத்தைச் சுத்தஞ் செய்தவர்கள் மூன்றாங்கண் வெளித்தோராவர்.

**முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்**
**அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்**

என்கிறது திருமந்திரம்.

அகக் கண்ணை நோக்க முகக் கண்கள் குருட்டுக் கண்கள். அகக் கண் வெளித்தவர்கள் மெய்ஞ்ஞான உண்மைகளை வெளிப்புக்கேற்றவாறு நிரூபணஞ்செய்ய வல்லவராவர்.

**மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய**
**சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே**

என்பது மேற்குறிப்பிட்ட திருமந்திரத்தின் பின்னீரடி.

இதனால், பிரஸ்தானத் திரய சதுட்டய உண்மைகள் நம்மனோர்க்கு நிரூபணஞ் செய்து காட்டலாகாமை புலனாகும்.

இவ்வாற்றால், சைவ சித்தாந்தம் எங்கே நாம் எங்கே, என்பது தெளிவாம்.

---

